KALKI 13.1.2008
ரூ.8.00 80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

சேனல் ஸ்பெஷல்



# சன் டி.வி. Vs கலைஞர் டி.வி.

– தொடரும் சேனல் யுத்தம்






ஆயுர்வேதம்
ஆரோக்கியத்தின் உரைகல்

# Team Eubio Care (Division of CAL)

வழங்கும்

# ஒற்றை மூலிகை நிவாரணம்




பாரம்பரிய ஆயுர்வேதத்தின் அடிப்படையில்
தற்கால ஆராய்ச்சிகளையும் மேற்கொண்டு,
Team Eubio Care வழங்கும் ஒற்றை மூலிகை நிவாரணம்.
காப்ஸ்யூல்களாக !



ஆம்லாகி | குகுளு | அர்ஜீனா
பில்வா | குடுச்சி | ஷள்ளாகி

To be used as directed by the Physician

AVAILABLE ONLY AT

**Team Health Shoppe For Wellness**

OPEN ON ALL DAYS

வண்டலூர்: டீம் ஹவுஸ், ஜி.எஸ்.டி. ரோடு, (Vandalur Zoo அருகில்) Ph: 2275 0502 / அண்ணாநகர்: பிளாட் 1200, Z பிளாக், 6வது அவென்யு, சென்னை - 40. Ph: 4269 3332 / இந்திரா நகர்: 3வது அவென்யு, எண்.26, தரைதளம், கார்ப்பரேஷன் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ், சென்னை - 20. Ph: 4269 5115 / புரசைவாக்கம்: எண்.238, புரசைவாக்கம் ஹை ரோடு, சென்னை - 10. Ph: 4542 8698 / தி.நகர்: 60, கிருஷ்ணா அபார்ட்மென்ட், சென்னை - 17. Ph: 4269 4849.

# வாழ்த்துக்கள்!



'இலையுதிர் காலம்' நாவலுக்காக இந்த ஆண்டு சாகித்ய அகாடமி பரிசு பெற்றிருக்கிறார் எழுத்தாளர் நீல.பத்மநாபன்.

''என் எழுத்தில் நான் கொஞ்சம் இருக்கலாம். ஆனால் முழுதும் நான் அல்ல. எழுதும்போது நான் நானல்ல. பேனா பிடித்ததும் அப்படிப் பிடிப்பவன் தேவதையாகி விடுகிறான்'' என்று கூறும் நீல.பத்மநாபன், திருவனந்தபுரத்தில் வசிப்பவர்.

பரிசு பெற்றிருக்கும் 'இலையுதிர் காலம்' இவரின் இருபதாவது நாவல். தலைமுறைகள், பள்ளிகொண்டபுரம், உறவுகள், தேரோடும் வீதியிலே உள்பட இவரது பல நாவல்கள் விமர்சகர்களால் பெரிதும் பாராட்டப்பட்டவை.

ஐம்பதாண்டுகளுக்கும் மேலாக எழுதும் நீல.பத்மநாபன், மின் துறையில் பணியாற்றியவர். இவரின் முதல் நாவலான தலைமுறைகளை எந்தப் பதிப்பாளரும் வெளியிட முன்வரவில்லை. கையெழுத்துப் பிரதியைத் தம் சொந்தச் செலவிலேயே நூலாக்கினார். அது வெளிவந்த சுருக்கிலேயே இந்திரா பார்த்தசாரதி, நா.வானமாமலை போன்ற இலக்கிய வாதிகளின் பாராட்டைப் பெற்றது. இவரது இரண்டாம் நாவலான பள்ளிகொண்டபுரம், லட்சுமி கிருஷ்ணமூர்த்தியின் வாசகர் வட்ட வெளியீடாக வந்து, வாசகர்களைக் கவர்ந்தது.

''பால பருவம், இளமை, முதுமை என்ற மனித வாழ்வின் இயல்பான ருதுக்களில், பருவ காலங்களில் இடையில் உதிர்ந்திடாத முதுமை - வயோதிகம் என்பது ஒரு வரப்பிரசாதமா, சாபக்கேடா? மீசை நரைத்துவிட்டால் ஆசைகளும் நரைத்துவிடுமா? இப்படி எத்தனையோ கேள்விகள் என்னுள் எழுந்தது...'' என்று சொல்லும் நீல.பத்மநாபன், இந்த விஷயங்களைத்தான் தம் 'இலையுதிர் காலம்' நாவலில் ஆராய்கிறார். அகாடமி பரிசு பற்றிக் கேட்டால், மனநிறைவு ஏற்பட்டுள்ளதாகத் தெரிவிக்கிறார். இவரைப் பற்றி வ.கௌதமன் இயக்கிய குறும்படம் ஒன்று வெளிவந்துள்ள நிலையில், ப்ரஸன்னா ராமசாமி முயற்சியில், வடகரை மோகன்தாஸ் எடுத்த இன்னொரு குறும்படம் முழுமைபெறக் காத்திருக்கிறது.

**திருப்பூர் கிருஷ்ணன்**

**சென்னை** தூர்தர்ஷனின் கூடுதல் பொது இயக்குநராகப் பொறுப்பேற்றிருக் கிறார் டாக்டர் வி.சேனாபதி.

''1975ல் தயாரிப்பாளராக இந்த அமைப் பில் சேர்ந்தேன். தேசிய நாடக பயிற்சிப் பள்ளி, திரைப்படத் தொழில்நுட்பம், அகில இந்திய வானொலி என்று பல பிரிவுகளிலிருந்து தேர்ந்தெடுத்தார்கள். என்னைத் திரைப்படத் தொழில்நுட்பப் பிரிவிலிருந்து தேர்ந்தெடுத்தனர். அவளுக் கென்று ஓர் மனம், உரிமைக் குரல் ஆகிய திரைப்படங்களில் ஸ்ரீதரிடம் உதவி இயக் குநராகப் பணிபுரிந்தேன். ஒழுங்குமுறை விற்பனைக் கூடங்களைப் பற்றி ஒரு செய்திப் படம் எடுத்திருந்தேன். என்னைத் தேர்வு செய்ய இந்தப் பின்னணிகளும் உதவின'' என்று தம் தொடக்கத்தைக் குறிப்பிட்டார்.

'பொதிகையின் தலைமை பொறுப்பை மார்ச், 2007ல் ஏற்ற பிறகு எந்த வகையான மாற்றங்களை அறிமுகப்படுத்தினீர்கள்?' என்றோம்.

''எங்கள் நிகழ்ச்சிகளை தைரியமாகக் குடும்பத்துடன் பார்க்கலாம். எத்தனை சேனல்களால் இப்படி நேர்மையாகக் கூற முடியும்? எனவே 'குடும்பத்துடன் கண்டு களிக்க பொதிகை' என்றே பெருமையுடன் ப்ராண்ட் செய்யத் தொடங்கினோம். அறி வாற்றலைத் தூண்டும் பயனுள்ள நிகழ்ச்சி களை வழங்குகிறோம். சென்ற அக்டோபரி லிருந்து விளம்பர வருமானமும் அதிகமாகி இருக்கிறது. ஸ்பான்சர்கள் தானாக நாடி வந்து ஆதரிக்கும் சூழல் உருவாகி யிருக்கிறது.

என்னுடையது நவீன மேலாண்மை அணுகுமுறை. எங்கள் நிலையத்தில் 80% பேர் தீவிர உழைப்பாளிகள் என்றால், மீதிப் பேர் சுமார் ரகம் எனலாம். முன்பெல் லாம் அனைவரையும் சமமாக நடத்தி வந்தார்கள். நான் அவரவரது அதிகபட்ச திறமையை வெளிப்படுத்தும் வகையில் செயலாற்றுகிறேன். தினமும் இந்த நேரத் துக்கு வந்து இந்த நேரத்துக்குச் செல்ல வேண்டும் என்பதற்குப் பதிலாக 'வாரம் ஒரு சுவையான நிகழ்ச்சியை அளிக்க வேண்டும். பகலிலோ, இரவிலோ உங் களுக்குப் பிடித்த வேளையில் பணியாற்ற லாம்' என்றேன். யாரையும் குறைவாகப் பயன்படுத்திக்கொள்ளக் கூடாது. யாருக் கும் அவர்களது அதிகபட்சத் திறனைவிட அதிகச் சுமையை ஏற்றக் கூடாது. இதுதான் என் கொள்கை'' என்கிற சேனாபதி, பொதிகையின் பலவீனங்கள் பற்றியும் பேசினார்.

''நெடுந்தொடர்கள் விஷயத்தில் பலவீனமாக இருப்பதை ஒப்புக்கொள் கிறேன். நிலைமை மாறி மீண்டும் பழைய இடத்தைப் பிடிப்போம் என்ற நம்பிக்கை இருக்கிறது. புதிய திரைப்படங் களை, பொருளாதாரம் காரணமாகத் திரை யிட முடிவதில்லை. பிரம்மாண்டமான செட்கள் போடப்படுவதில்லை என்பதைக்



❋ சேனாபதி

# "எத்தனை சேனலால் நேர்மையாகக் கூற

குற்றமாகச் சொல்பவர்கள் உண்டு'' என்கிறார்.

'இந்த பலவீனங்களைக் களைய என்ன செய்வதாக இருக்கிறீர்கள்?'

''என் தனிப்பட்ட கருத்து இதுதான். நெடுந் தொடர்கள் தயாரிப்பு என்பது ஃப்ரீலான்ஸர்களிடம் இருப்பதுதான் சரியானது. மாத ஊதியம் பெறும் நபர்கள் இதற்கு ஏற்றவர்கள் அல்ல. ஒரு திரைப்படம் தயாரிப்பதுபோல தான் இதுவும்.

புதிய திரைப்படங்களை வெளியிட முடிவதில்லை என்றாலும் புத்தம் புதிய திரைப் பாடல்களை 'பொதிகையில் புதிய ராகங்கள்' என்ற பெயரில் வெளியிடுகிறோம்.

பிரம்மாண்ட செட்கள் போடலாம்தான். ஆனால், பட்ஜெட்டில் எங்களுக்கு ஒதுக்கப் பட்ட தொகையை அதற்கே செலவழித்தால் பிற அறிவுபூர்வமான நிகழ்ச்சிகளை நடத்த முடியாமல் போய்விடுமே!''

'என்றாலும், தனியார் சேனல்களின் போட்டி கடுமையாகும்போது, அதை எதிர் கொள்ள வேண்டியது அவசியமில்லையா?' என்றால்,

''போட்டி நிலவுவதை ஆரோக்கியமாகத் தான் எண்ணுகிறேன். தனியார் விமான நிலையங்கள் வந்த பிறகு இந்தியன் ஏர் லைன்ஸ் தன்னை மாற்றிக்கொள்ளவில்லையா? அதுபோல நாங்களும் எங்களை மாற்றிக்கொண்டு வருகிறோம்.

தனியார் சேனல்களில் லாபம் ஈட்டுவது மட்டுமே குறிக்கோள். நாங்களோ லாபம் ஈட்டுவது, சமூக உணர்வுடன் நிகழ்ச்சிகளைப் படைப்பது ஆகிய இரண்டிலுமே கவனம் செலுத்த வேண்டியுள்ளது'' என்கிறார் சேனாபதி.

– ஆதர்ஷ்

படம் : ஸ்ரீஹரி

# இப்படி முடியும்?''





**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
**2225 1522, 2225 0623, 2225 1324**

தொலைநகல் :
**044 - 2225 1021**

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 440/-
ஆறு மாதம் : ரூ. 220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.


இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

# சன் டி.வி.



* கலாநிதி மாறன்

**ப**லர் மனுச் செய்துவிட்டு மாதக் கணக்கில் மந்திரிகள் வீட்டு முன்பு டெல்லியில் தவம் கிடக்க, எல்லா வேலைகளையும் முடித்து 'இந்திய தொலைக்காட்சி வரலாற்றிலேயே முதல் முறையாக மூன்றே மாதத்தில் ஒளிபரப்பைத் தொடங்கியது கலைஞர் தொலைக்காட்சி. மதுரை தினகரன் பத்திரிகை அலுவலகம் எரிக்கப்பட்ட பிறகு, நடந்த அரசியல் பூகம்பத்தில் முளைத்த சேனல் கலைஞர் தொலைக்காட்சி. அதுநாள் வரை தி.மு.க.வின் செல்லப்பிள்ளையாக இருந்த சன், அது முதல் எதிரியாகிப் போனது. கலைஞர் Vs சன் யுத்தம் தொடங்கி, இது வெற்றிகரமான நான்காவது மாதம். இந்த நான்கு மாதத்தில் மறைமுகமாகவும் நேரிடையாகவும், இரு சேனல்களும் பலவிதங்களில் மோதிக்கொண்டுள்ளன; கொண்டிருக்கின்றன.

**ந**மது தமிழ் தொலைக்காட்சிகளின் பலமே சினிமா படங்களும், கர்சீஃப்பை நனைக்கும் கண்ணீர் சீரியல்களும்தான். பழைய-புதிய படங்களை அதுவும் குறிப்பாக, ரஜினி படங்களை வாங்கி அப்போதைக்கு ஒளிபரப்பும் உரிமையைப் பெறத் துடித்த கலைஞர் டி.வி, அதில் ஓரளவு வெற்றியும் பெற்றது. சினிமா பங்களிப்பில் சன் சொல்வதே வேதவாக்கு என்று இருந்த காலம் மாறியது. ஒரு முறை கே.டி.வி.யில் 'அருணாசலம்' படம் ஓடிக்கொண்டிருக்க, கலைஞரில் 'குரு சிஷ்யன்' படம் ஒளிபரப்பாகிக் கொண்டிருந்தது. உடனே 'குரு சிஷ்யனை' கட் செய்துவிட்டு, 'அருணாசலத்தை' ஒளிபரப்பியது கலைஞர் டி.வி! இதைச் செய்ததன் நோக்கம் 'எங்களாலும் எல்லா சினிமாக்களையும் போட முடியும்' என்பதைக் காட்டுவதற்காகத்தான். ரஜினி நடித்த 'சிவாஜி' பட ரிலீஸின் போது கிளிப்பிங்குகளையும், பாடல்களையும், சன்னுக்கும், கலைஞருக்கும் எந்தப் பாரபட்சமுமில்லாமல் கொடுக்க ரொம்பவே சிரமப்பட்டார்கள் படக் குழுவினர். இப்போது அஜீத்தின் 'பில்லா' உரிமையை கலைஞர் டி.வி. வாங்கிவிட, அந்தப் படத்தின் கிளிப்பிங்குகளைக்கூட ஒளிபரப்புவதில்லை சன் டி.வி! மாறாக

**நாளை ஆட்சியில் இல்லாத பட்சத்தில் கலைஞர் டி.வி.யால் இதே அதிகாரத்தை காட்ட முடியுமா?**



# தொடரும் சேனல் யுத்தம்




புதிய 'பில்லா'வின் முக்கியத்துவத்தைக் குறைக்க பழைய 'பில்லா'வையும் பாடல்களையும் அடிக்கடி ஒளிபரப்பிக் கொண்டிருக்கிறது.

சீரியல்களிலும் இதே பிரச்னைதான். மேகலா, கோலங்கள், அரசி, லட்சுமி என்று சன் போட்டுத்தாக்க, சரிக்குச் சரியாக வைரநெஞ்சம், மஞ்சள் மகிமை, தேன்மொழியாள், நம்ம குடும்பம் என்று பெண்களையே கலைஞரும் டார்கெட் செய்கிறது. ஆனால், இந்த விஷயத்தில் கோலங்களும், அரசியும் ஏற்கெனவே லீடிங் என்பதால் கலைஞர் தொலைக்காட்சி சீரியல்கள் அடிவாங்கியது டி.ஆர்.பி.யில் நன்றாகவே பளிச்சிட்டன. கலைஞர் தொலைக்காட்சி புதுமையாக மேஜிக் நிகழ்ச்சி ஒன்றைத் துவங்க, விட்டேனா பார் என்று அதே மாதிரியான நிகழ்ச்சி சன்னிலும் ஆரம்பமானது.

## கலைஞர் டி.வி.

## S

விஜய் டி.வி.யின் 'ஜோடி நம்பர் ஒன்' நிகழ்ச்சியை சன் காப்பியடித்து 'மஸ்தானா மஸ்தானா' என்று மார்தட்ட, கலைஞர் விடுமா? 'மானாட மயிலாட' என்று கூவியது. விஜய்யின் இன்னொரு ப்ரோக்ராமான 'கலக்கப் போவது யாரு' சன்னில் 'அசத்தப் போவது யாரு' என்று மாற, கலைஞர் 'எல்லாமே சிரிப்புதான்' என்றது.

கலைஞரின் சட்டமன்றப் பொன்விழாவையொட்டி பல்கலைக்கழக மண்டபத்தில் கலைஞர்களின் கவர்ச்சி நிகழ்ச்சிகளை ஒளிபரப்பும் தனி உரிமையை கலைஞர் டி.வி. பெற்றதும் விழித்துக்கொண்ட சன் டி.வி., மலேசியா, சிங்கப்பூரில் நடிகர் சங்கம் நிகழ்த்திய கலை நிகழ்ச்சியை ஒளிபரப்பும் உரிமையைப் போராடிப் பெற்றுவிட்டது. இதற்கிடையில் சன் மியூசிக் சேனலுக்குப் போட்டியாக தேனருவி, சன் நியூஸுக்குப் போட்டியாக கலைஞர் செய்திகள் ஆகிய தனி சேனல்களைக் கொண்டு வருவதில் பிஸியாகிவிட்டது கலைஞர் குடும்பம்.

நிகழ்ச்சிகளில் போட்டா போட்டி ஒரு பக்கம் இருக்க, விநியோக ஏரியாவையும் சன்






குழுமத்திலிருந்து கைப்பற்ற திரை மறைவு வேலைகள் நடந்து வருகின்றன. அரசு கேபிள் தொலைக்காட்சி நிறுவனம் செயல்பட இருக்கிறது. இதைச் சமாளிக்க டி.டி.ஹெச் (DTH) வசதியை அறிமுகப் படுத்தியது சன். ஆனால், கேபிள் ஆப ரேட்டர்கள் தூண்டிவிடப்பட, சன்னின் DTH விநியோகமும், கொஞ்சம் ஜகா வாங்கியது. இந்தப் பிரச்னையினால் சன் தொலைக்காட்சி, மதுரைப் பகுதியில் மூன்று நாட்கள் முடக்கப்பட்டது. இருந் தாலும், சன் குழுமம் சத்தம் போடாமல் இரண்டு லட்சத்துக்கும் மேற்பட்ட DTHகளை விற்பனை செய்துவிட்டதாம். மத்திய அரசின் மூலமாக, கிராமப்புறங் களில் நேரடி தூர்தர்ஷன் ஒளிபரப்பைப் பெற வசதி செய்து தரப்படுகிறது. இந்த ஒளிபரப்பில் சன்னையும், ஜெயாவையும் வெட்டிவிட்டார்கள்! சன் டி.வி. குழுமம், ஆட்சிப் பொறுப்பில் தொடர்பில்லா விட்டாலும் எப்படிப்பட்ட அதிரடிகளை யும் சந்திக்கத் தயாராக இருக்கிறது. ஆனால், நாளை அதிகாரம் இல்லாத பட்சத்தில், கலைஞர் தொலைக்காட்சி யால் அதே அதிரடியைக் காட்ட முடியுமா என்பது கேள்விக்குறி. கூடுதலாக, ஜெய லலிதா ஆட்சியைச் சமாளித்த அனுப வமும் சன்னுக்கு இருக்கிறது.

'கொஞ்சம் அவசரப்பட்டுவிட் டோமோ' என்ற எண்ணம் கலைஞர் குடும்பத்தார் சிலருக்கு இருப்பதாகத் தெரிகிறது. விரிசல் மேலும் பிளவாக மாறாத வண்ணம் நிலைமையைச் சரி செய்ய குடும்ப நலன் விரும்பிகள் முனைந்திருக்கிறார்கள். ''மை கிராண்ட் சன் டி.வி'' என்று தம்மால் பெருமிதத் துடன் அழைக்கப்பட்ட தொலைக்காட்சி யோடு போட்டி போடும் நிலை வரும் என்று கலைஞர் நினைத்துக்கூடப் பார்த்திருக்க மாட்டார்.

- ஸ்ரீநி



# தங்க ரூபம் தெய்வ கடாட்சம்

**Thejus**

24 ct GOLD PLATED GIFTS

**Show room:**

Next to jeeva park old # 85 G.N.Chetty Road, T.Nagar, Chennai - 17, Mobile: 98400 21384,
Timing: 9.30 am to 7.00 pm SUNDAY HOLIDAYfor online purchase visit:
www.chennaionline.com www.indiavarta.com, www.sifymall.com

We Accept Credit Cards

# சரோஜா வைத்யநாத ஐயர் பரம்பரை ஜோதிடர்



ஜோதிடத்தில் 50 வருட அனுபவம் கொண்ட

"ஜோதிட ராணி"

**ஸ்ரீமதி சரோஜா வைத்யநாத ஸ்வாமி ஐயர்**

கைரேகை, ஜாதகம், நியூமராலஜி, வாஸ்து, சாமுத்ரிகா லக்ஷ்ணம், திருமணப் பொருத்தம், அனைத்தும் பார்க்கப்படும்.

அனைத்து ஆலோசனைகளும் வழங்கப்படும்.

வெளியூரில் வசிப்பவர்கள் அதிகபட்சமாக 5 கேள்விகள் வரை கேட்க ரூ.500/- கட்டணத்தை முன்னதாகவே அனுப்பவும்.

3, சுப்பாரெட்டி தெரு, மேற்கு மாம்பலம். சென்னை - 33.
(மேற்கு மாம்பலம் காசி விஸ்வநாத கோயில், மற்றும் காஞ்சி சங்கர மடம் அருகில்)

Call : 94451 63682, 94446 84006

## ப்ரிஸ்கிரிப்ஷன்

### புதிய பகுதி

**ஒரு வயதாகும்போது என் மகனுக்கு வலிப்பு நோய் வந்தது. அதற்குப் பிறகு கடந்த இரண்டு வருடங்களாக இந்தப் பிரச்னை இல்லை. அவனுக்குத் திரும்பவும் வலிப்பு நோய் வர வாய்ப்பு உண்டா?**

**- வ.ஜீவன், நெல்லை**

குழந்தை நல மருத்துவர் நிகிலா ஷர்மா: முதலில் உங்கள் மகனுக்கு ஏற்பட்டது எதுபோன்ற வலிப்பு என்பது தெரிய வேண்டும். அதிகமான காய்ச்சலைத் தொடர்ந்து கொஞ்ச நேரத்துக்கு வலிப்பு ஏற்படுவது என்பது குழந்தைகளுக்கிடையே மிகவும் சகஜமானது. உடலின் வெப்பம், மூளையில் உள்ள நுட்பமான சில செல்களைத் தாக்குவதால் இப்படி ஏற்படுகிறது.

# ஏ செல்ஃபோன்

Febrile Fits எனப்படும் இந்த வகை வலிப்பு நோய் ஏற்பட்ட சுமார் ஒரு நிமிடத்தில் குழந்தை நார்மலாகி, தன் வழக்கமான செயலில் ஈடுபடத் தொடங்கும். இதில் கவலைப்பட எதுவுமில்லை. ஜுரம் தணிந்த பிறகு, ஈ.ஈ.ஜி. சோதனை செய்து பார்க்க வேண்டும். அப்போது மூளையில் எந்தப் பிரச்னையும் தென்படவில்லை என்றால், மீண்டும் வலிப்பு வர வாய்ப்பு இல்லை.

மற்றபடி மூளையில் ஏற்படும் வேறு ஏதாவது சிக்கலால் வலிப்பு வந்திருந்தால் மருத்துவர் அது குறித்து விளக்கியிருப்பார். இரு சக்கர வாகனம் ஓட்டுவது, நீச்சல் பயிற்சி (இதையெல்லாம்தான் இப்போது மூன்று வயதிலேயே அளிக்கத் தொடங்கி விடுகிறார்களே) ஆகியவை குறித்த சில முன்னெச்சரிக்கைகளை அளித்திருப்பார். அடுத்த முறை காய்ச்சல் ஏற்பட்டால், அது அதிகமாகாதபடி மாத்திரை கொடுத்து காய்ச்சலைக் குறைத்துவிடலாமே.

ஒரு நாளிலேயே பலமுறை குழந்தைக்கு வலிப்பு ஏற்படும்போது மருத்துவரைச் சந்திக்க வேண்டும். குழந்தை பிறந்தவுடன் அதன் உடல் நிலை குறித்த தகவல்கள், குடும்பத்தில் உள்ளவர்களுக்கு வலிப்பு நோய் உண்டா போன்ற விவரங்களை மருத்துவர் கேட்பார். கேட்கா விட்டாலும் தவறாமல் சொல்ல வேண்டும்.

**டாக்டர், என் கணவருக்கு அடிக்கடி செல்ஃபோன் ஒலிப்பதுபோல ஒரு பிரமை ஏற்படுகிறது. திடீர் திடீர் என்று என்னைக் கூப்பிட்டு, 'அந்த செல்ஃபோனை எடு... யாரோ கால் பண்றாங்க' என்கிறார். என்ன செய்வது?**

**- சுபஸ்ரீ, சென்னை - 2**

* ராமகிருஷ்ணன்



மனநல மருத்துவர் ஆனந்தன்: உண்மையில் ஒலிக்காத போதும், காதில் செல்ஃபோன் ஒலிப்பது போல் கேட்பதற்கு Ringxiety என்று பெயர் வைத்திருக்கிறார்கள். எனக்குத் தெரிந்த ஒருவர் தன் வேலையைத் தவிர, கமிஷனுக்



# பிரமை!

காக வீடு பிடித்துக் கொடுக்கும் வேலையில் இறங்கினார். தொடக்கத்தில் கொஞ்சம் காசு வர, அதையே சிந்திக்கத் தொடங்கினார். தன் வேலையைவிட, இந்த கமிஷன் வழிதான் அவருக்கு முக்கியமாகிவிட்டது. வேலையில் கவனம் செல்லாததால் சரியாகச் செய்ய முடியவில்லை. தவிர, பார்ப்பவர்களிடமெல்லாம் ரியல் எஸ்டேட் பற்றிக் கூற, அவர்களில் பலரும் இவரைத் தவிர்க்கத் தொடங்கினார்கள். வேலையைச் சரியாகச் செய்யாததால் குற்ற உணர்ச்சி, எதிர்பார்த்த கமிஷன் தொகை வராததால் ஏற்பட்ட ஏமாற்றம் எல்லாமாகச் சேர்ந்து குழப்பம், சோர்வு ஆகியவற்றை உண்டாக்க, ரிங்ஸைடி ஏற்பட்டது.

உங்கள் கணவருக்கு தினமும் ஆழ்ந்த தூக்கம் தேவை. அப்படியும் இந்த நிலை மாறவில்லையென்றால் மனநல மருத்துவரை அணுகுவது நல்லது.

**எனக்குத் தூக்கம் வரவில்லை என்றால் ஒரு அவில் மாத்திரை போட்டுத் தூங்கி விடுகிறேன். நான் செய்வது தவறா?**

**- டி.எஸ்.ரவீந்திரன், பெருங்கொளத்தூர்**

தூக்க நோய் நிபுணர் டாக்டர் ராமகிருஷ்ணன் : அவில் தூக்க மாத்திரை இல்லை என்பது பலருக்குத் தெரிவதில்லை. சில நாட்களுக்குப் பிறகு, ஒரு மாத்திரை போட்டுக்கொண்டால் தூக்கம் வருவதில்லை என்று இரண்டு மாத்திரைகள் போட்டுக்கொள்ள ஆரம்பிப்பார்கள். இப்படி, டாக்டரைக் கலந்து ஆலோசிக்காமல் தாங்களே மாத்திரை அளவை அதிகரிப்பதும், 'திடீரென்று ஒரு நாள் 'தூக்க மாத்திரை போட்டுக்கொள்வது தவறு. இனிமேல் மாத்திரையை நிறுத்த வேண்டும்' என்று முடிவு செய்து, மாத்திரை சாப்பிடுவதை நிறுத்திவிடுவதும் மிகவும் தவறு. தூக்கம் பிரச்னையாகும்போது, எவ்வளவு சீக்கிரம் டாக்டரிடம் போகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது. சிலருக்கு தூக்கம் வருவதில் பிரச்னை என்றால், 'இரவு தூக்கம் வராதே' என்ற எண்ணமே மனத்தில் ஒருவித பயத்தை ஏற்படுத்திவிடும். இதற்கு வெறும் தூக்க மாத்திரை மட்டும் போதாது. மனோதத்துவ மருத்துவமும் அவசியம்.

* ஆனந்தன்



தொகுப்பு :

**ஜி.எஸ்.எஸ்., மானஸா**



# போலீஸ் தந்த

**மக்கள் தொலைக்காட்சியில் ஒளி பரப்பாகும் 'புதிய கோணங்கிகள்' நிகழ்ச்சி உள்ளடக்கத்திலும் உணர்த்தும் முறையிலும் மற்ற தொலைக்காட்சி நிகழ்ச்சிகளிலிருந்து முற்றிலும் மாறு பட்டது. சமூக அவலங்கள் மீதான விமர்சனங்களை அங்கதச் சுவையோடு கலந்து கொடுக்கும் இந்நிகழ்ச்சியின் பிரதானக் கலைஞர்கள் பிரகதீஸ்வரன் - செந்தில் இருவரும் நம்மோடு பேசி னர்...**

"இன்றைக்குப் பொதுவாகவே தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில், சமூகத்தின் மீதான அக்கறையை மருந்துக்குக்கூடப் பார்க்க முடிவதில்லை. தனிமனித விரோதங்களும், மோதல்களுமே பிரதானமாகக் காட்சிப்படுத்தப்படுகின்றன. இப்படிப்பட்ட மாயைகளிலிருந்து ரசிகர்களை மடைமாற்றும் ஒரு சிறிய முயற்சிதான் புதிய கோணங்கிகள் நிகழ்ச்சி'' என்று சொல்லும் இவர்கள், தங்கள் நிகழ்ச்சி தொலைக்காட்சியில் ஒளிபரப்பாவதற்குக் காரணமென்று இயக்குநர் சீமானைக் கைகாட்டுகின்றனர்.

''ஆரம்பத்தில் அறிவொளி இயக்கத்தின் மூலமாக கிராமம் கிராமமாகச் சென்று நிகழ்ச்சியை வழங்கி வந்த எங்களுக்கு, அந்தப் பாமர மக்களிடையே கிடைத்த வரவேற்பும் அங்கீகாரமும், 'தனியாக ஒரு கலைக்குழுவை ஆரம்பித்தால் என்ன' என்ற எண்ணத்தை உருவாக்கியது. அப்படி 1997ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டதுதான் 'பூபாளம்' கலைக்குழு. எங்களை வார்த்தெடுத்து வளர்த்தெடுத்ததில் தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் கலை இரவு மேடைகளுக்குப் பெரும் பங்கு உண்டு.

அப்படிப்பட்ட ஒரு மேடையில் எங்கள் கலைக்குழுவின் நிகழ்ச்சியைக் கவனித்த இயக்குநர் சீமான், அதை வீடியோவில் பதிவுசெய்து பா.ம.க. நிறுவனர் ராமதாஸிடம் போட்டுக் காண்பித்திருக்கிறார். நிகழ்ச்சியைப் பார்த்து மகிழ்ந்துபோன அவர், எங்களை அழைத்துப் பாராட்டியதுடன், மக்கள் டி.வி.யில் தொடர்ந்து நிகழ்ச்சி பண்ண வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார்'' என்று நெகிழும் பிரகதீஸ்வரன் - செந்தில் இருவரின் பூர்வீகம் புதுக்கோட்டை மாவட்டம்.

"தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சார்ந்த ஒருவன் இறந்த பிறகு பொது மயானத்தில் புதைக்க இடம் கிடைக்காத அவலத்தை 'மயானம்' என்ற பெயரில் தஞ்சை திருக்காட்டுப் பள்ளியில் நாடகமாகப் போட்டோம். நாடகத்தைப் பார்த்த தாழ்த்தப்பட்ட மக்கள், பொது மயானத்தில் தங்களுக்கும் இடம் கேட்டுப் போராடி இருக்கின்றனர். இது போன்ற நிகழ்வுகள்தான் எங்களை இன்றும் உந்திச் செலுத்துகின்றன.

மதுரையில் ஒரு நிகழ்ச்சி. காவல்




துறையின் அத்துமீறல்களையும், அடாவடித்தனத்தையும் மேடையில் அரங்கேற்றினோம். நிகழ்ச்சி முடிந்ததும் ஒரு போலீஸ்காரர் எங்கள் கையில் 500 ரூபாயைத் திணித்துவிட்டு, 'உங்கள் கலைக்குழுவின் வளர்ச்சிக்கு என்னால் ஆன சிறு உதவி' என்று பாராட்டிவிட்டுப் போனார்'' என்று நெகிழ்கின்றனர்.

'எத்தனை காலத்துக்குத்தான் மேடை நிகழ்ச்சி. சினிமா ஆசை இல்லையா?' என்றால், ''மேடைங்கறது சாதாரண விஷயம் கிடையாது. நாட்டுல மகத்துவமிக்க இடம்னா அது மேடைதான். மேடைகள் மூலமா சமூகத்தில் எத்தனையோ ஆக்கபூர்வமான மாற்றங்கள் நிகழ்ந்திருக்கு தெரியுமா? நம் நாட்டின் சுதந்திரப் போராட்டத்துக்கான போராட்டக் களமாக தலைவர்கள் மேடையைத்தான் பயன்படுத்தியிருக்கிறார்கள். ஆனால், இன்றைக்கு மேடைகள் ஆள் பிடிக்கும் களமாகவும், அனர்த்தங்கள் அரங்கேறும் இடமாகவும் இருக்கின்றன. இதற்கு முழுக் காரணம் திராவிடக் கட்சிகள்தான். என்.எஸ்.கே., எம்.ஆர். ராதாவைத் தவிர அந்த இயக்கத்திலிருந்து யாரும் மேடையை ஆக்கபூர்வமாகப் பயன்படுத்தவில்லை என்பது என் தாழ்மையான கருத்து. நான் ஏற்கெனவே பாரதிராஜாவின் 'கடல்பூக்கள்' படத்தில் நடிச்சிருக்கேன். இப்ப பாலாஜி சக்திவேலோட 'கல்லூரி' படத்துலயும் நடிச்சிருக்கேன். ஆனாலும் சினிமாங்கறது ஓர் இரவல் வெளிச்சம். அதில் எங்களோட சுயவெளிச்சம் தொலைஞ்சு போயிடுமோன்னு கொஞ்சம் உதறலும் இருக்கவே செய்யுது'' என்று சொல்லும் பிரகதீஸ்வரன், தற்போது குறும்படம் ஒன்றை எடுத்து வருகிறார்.

– கதிர்பாரதி

நரேந்திர மோடியின் வெற்றி 'மத வெறியைக் கிளப்பிப் பெற்ற வெற்றியல்ல' என்று சொன்ன ஜெ., சென்னைக்கு வரும் மோடிக்கு விருந்து கொடுக்கப் போவதாக அறிவித்திருக்கிறார். இதன் மூலம் பி.ஜே.பி.யுடனான உறவுக்கு அம்மா பிள்ளையார் சுழி போட்டுவிட்டதாகவே அரசியல் நோக்கர்கள் கருதுகின்றனர்.

இனி 2011-ல்தான் தமிழக சட்ட சபைக்குத் தேர்தல். அதற்குள் தி.மு.க. அரசை அசைத்துப் பார்க்க, 2009-ல் மத்திய அரசை ஆளும் வாய்ப்புப் பெற்ற கட்சியுடன் நெருங்க வேண்டும் என்கிற எண்ணம் உட்பட, பல மாஸ்டர் ப்ளான்களோடு காய்களை நகர்த்துகிறார் ஜெ. அவர் காங்கிரஸை பல முனைகளில் அணுகிப் பார்த்து, 'சீ....சீ... இந்தப் பழம் புளிக்கும்' என்ற கதையாக விட்டுவிட்டார் என்பதுதான் உண்மை. இவருக்காக சோனியாவிடம் பரிந்துபேச எந்த காங்கிரஸ் தலைவருக்கும் இனி தைரியம் கிடையாது. காரணம், 'ஜெயலலிதாவுடன் இனி எந்தக் கட்டத்திலும் கூட்டணி கிடையாது' என்கிற சோனியாவின் திடமான முடிவுதான். இதற்கு இருவரும் வெளிப்படையாகச் சொல்ல விரும்பாத பல காரணங்கள் உண்டு. தமிழக காங்கிரஸின் ஒரு பிரிவினரின் வற்புறுத்தலுக்கு இணங்கி சோனியா, தி.மு.க.வைக் கை கழுவினால், உடனே கைகொடுக்க விஜயகாந்த் தயாராக இருக்கிறார். தமிழக அரசியலில் காங்கிரஸ் இப்படி சௌகரியமாக இருப்பதால் அது தம்மோடு கூட்டணி அமைக்கும் வாய்ப்பே இல்லை என்று முடிவெடுத்த பிறகே ஜெ. அத்வானிக்கு சிக்னல் கொடுத்திருக்கிறார் என்கிறார்கள்.

அ.தி.மு.க. - பா.ஜ.க. கூட்டணி தமிழகத்துக்குப் புதிதல்ல. 1998 பாராளுமன்றத் தேர்தலில் பி.ஜே.பி.யோடு கூட்டணி அமைத்ததும், அமைச்சரவையிலும் இடம்பெற்றார் ஜெ. அப்போது தி.மு.க. அரசைக் கவிழ்க்க வேண்டுமென்று வாஜ்பாயைத் தூங்கக்கூட விடாமல் நெருக்கடி கொடுத்தோடு, இறுதியில் பி.ஜே.பி. அரசையே கவிழ்த்தார். ''அந்த அனுபவத்துக்குப் பிறகு, சென்னை கடற்கரையில் ஒரு கூட்டத்தில் ஜெ. பேசும்போது, 'என் வாழ்க்கையில் நான் செய்த பெரிய தவறு பி.ஜே.பி.யுடன் கூட்டணி வைத்ததுதான்' என்றார். இப்படியொரு மோசமான அனுபவத்தைத் தந்த ஜெ.வுடன் பி.ஜே.பி. கூட்டணி வைத்துக்கொள்ளத் தயாராயிருக்கிறது. ஜெயலலிதாவும் தயார்! ஆனால், மக்கள் எதையும் மறக்கவில்லை'' என்கிறார் காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினரான பீட்டர் அல்போன்ஸ்.

தமிழகத்தில் 2006 சட்டமன்றத் தேர்தலில் தனித்துப் போட்டியிட்ட பி.ஜே.பி., இரண்டு சதவிகித வாக்குகளையே பெற்றது! எனவே, அதன் தமிழக

## மோடி போட்ட அஸ்திவாரம்;



பலத்தை நம்பி அ.தி.மு.க. அதனுடன் இணையவில்லை என்பது வெளிப்படை. பாராளுமன்றத் தேர்தலைப் பொறுத்தமட்டில், தேசிய அளவில் ஆட்சிக்கு வரும் வாய்ப்பு பெற்றவை காங்கிரஸும் பி.ஜே.பி.யும்தான். எனவே காங்கிரஸோடு இல்லாதபோது, பி.ஜே.பி.யுடன் இருப்பதுதான் புத்திசாலித்தனம் என்று ஜெ. நினைக்கிறார்.

''சுவாமி, சோ போன்றவர்கள் ஜெயலலிதாவின் குணாம்சத்தையும் அவரது உடனடி அரசியல் தேவையையும் புரிந்துகொண்டு பி.ஜே.பி.யோடு அவரை இணைத்து விடும் முயற்சியில் தீவிரமாக ஈடுபடுகிறார்கள்.



# ஜெ. எழுப்பும் கட்டம்!

தமிழகத்தில் அ.தி.மு.க.வுக்கு என்று கணிசமான ஓட்டு வங்கி உண்டு. ஆனால், கடந்த கால மோசமான அனுபவத்துக்குப் பிறகும் பி.ஜே.பி. ஜெயலலிதாவோடு கூட்டணி அமைத்தால், ஆட்சிக்கு வரும் நிலையில், அதே பழைய நிர்ப்பந்தங்களைத்தான் சந்திக்க நேரிடும். எனவே, சூடு கண்ட பூனையான பி.ஜே.பி., ரொம்பவும் ஆர்வத்துடன் வந்து இணைந்து கொள்ளுமா என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும். ஆனால், நிச்சயம் தி.மு.க., காங்கிரஸ் அணியில் இருக்கும்'' என்று உறுதியாகச் சொல்கிறார் தி.மு.க.வின் சுகப்பு.

**பா**.ஜ.க.வோடு ஜெ. மீண்டும் கூட்டணி அமைப்பது அ.தி.மு.க.வின் பல ஸீனியர் தலைவர்களுக்கு உற்சாகம் தரவில்லை. ''பி.ஜே.பி.யோடு கூட்டணி அமைத்தால் கிட்டத்தட்ட 95 சதவிகித சிறுபான்மை வாக்குகளை இழந்து விடுகிறோம். ஆறேழு பாராளுமன்றத் தொகுதிகளில் சிறுபான்மையோர் ஓட்டே முடிவை நிர்ணயம் செய்கிறது. எங்களுடன் ஏற்கெனவே ம.தி.மு.க. இருக்கிறது. முயற்சி செய்தால் பா.ம.க.வையும் சேர்க்கலாம். தவிர, சரத்குமார் கட்சி, கார்த்திக் ஆகியோரை இணைத்துக் கொண்டால், தி.மு.க. அணிக்குக் கடுமையான போட்டியைக் கொடுக்கலாம். தேர்தல் முடிவுகளுக்குப் பிறகு நிலைமைக்கேற்ப ஆதரவைத் தெரிவித்து மத்திய அமைச்சரவையிலும் இடம் பெறலாம்'' என்கிறார் மூத்த அ.தி.மு.க. பிரமுகர் ஒருவர்.

இதற்கிடையில் தி.மு.க., அ.தி.மு.க. என்று இரண்டு கட்சிகளுமே விஜயகாந்த் தனியாகப் போட்டியிடுவதைத்தான் விரும்புகின்றன. அவர் வெற்றி பெற முடியாது... ஆனால் வாக்குகளைப் பிரித்தால் தங்களுக்கே லாபம் என்று கணக்குப் போடுகின்றன இந்தக் கட்சிகள்! மொத்தத்தில் அடுத்தடுத்து நிகழவிருக்கும் பல அதிரடித் திருப்பங்களுக்கு அஸ்திவாரமாக அமைந்துவிட்டது மோடியின் வெற்றி!

– ப்ரியன்



# கல்கி




2008 ஜனவரி 13
சர்வஜித் மார்கழி 28
மலர் : 66
இதழ் : 24


தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா

*- பாரதியார்*

## பேனசீருடன் மறைந்த உண்மை!

**பே**னசீர் புட்டோ மரணத்துக்கு பாக். அரசு அல்கைதா மீது பழிபோட, அல்கைதா அதை மறுத்து, பெண்களைக் கொல்வது எங்கள் 'தர்மம்'(!) இல்லை என்று விளக்க, பிரிட்டிஷ் அரசு, 'உண்மையைக் கண்டுபிடிக்க நாங்கள் உதவுகிறோம்' என்று பாக். அரசுக்குக் கை கொடுக்க முன் வர, அமெரிக்காவும் வற்புறுத்த... எதற்கும் மசியாமல், தேர்தலை ஒத்திவைக்க மட்டும் அங்கீகாரம் அளித்திருக்கிறார் பாக். அதிபர் முஷாரஃப்.

ஒன்று மட்டும் மர்மம் இன்றித் தெரிகிறது - பேனசீரை யார், எதற்காகக் கொன்றார்கள் என்கிற உண்மை நிச்சயம் வெளிவரப் போவதில்லை! அந்த உண்மை பேனசீருடன் சேர்ந்து புதைக்கப்பட்டுவிட்டது.

பேனசீருக்குப் போதுமான அளவு பாதுகாப்பு அளிக்க பாக். அரசு தவறியது ஏன்? அவர் பிரிட்டிஷ் தனியார் பாதுகாப்பு நிறுவனத்தை அமர்த்திக்கொள்ள அனுமதி மறுக்கப்பட்டது ஏன்...?

கொலை நடந்ததுமே சுறுசுறுப்பாக இயங்கி, சந்தேகத்துக்குரியவர்களைக் கைது செய்து, விசாரணைகளுக்கு உடனடியாக ஏற்பாடு செய்யப்படாதது ஏன்? என்ற கேள்விகளுக்கான திருப்திகரமான விடைகளை பாகிஸ்தான் அரசால் தர முடியவில்லை. "அவர் சுடப்பட்டு இறக்கவில்லை; தலையில் அடிபட்டதால் இறந்தார்" என்று பாக். அரசு அளித்த விளக்கத்தை, "அபத்தம்" என்று நிராகரித்துவிட்டார் பேனசீர் சார்பில் பேச அனுமதி பெற்ற பாபர்.

முஷாரஃப் போன்று சர்வாதிகாரியாக இருக்கக்கூடிய அதிபர்கள்

இந்த
ஐடியா
எப்படி
இருக்கு
மோடி
சார்...




பதவி இழக்க நேர்ந்தால், அவர்கள் ஆண்ட இடத்தில் ஜனநாயக ஆட்சி நிறுவப்படுகிறபோது, உடனடியாக சர்வாதிகாரத் தலைவருக்கு இக்கட்டுகள் பெருகும். அவர் நீதி விசாரணையைச் சந்தித்து, அவசியமானால் தண்டனை அனுபவிக்க வேண்டியிருக்கும். உலகெங்கும் இதுவே நடைமுறை. இதற்கு அஞ்சியே சர்வாதிகாரத் தலைவர்கள் மேலும் மேலும் தவறுகளை இழைக்கிறார்கள்.

போதாக் குறைக்கு, பாகிஸ்தானுக்கு அமெரிக்கா பயங்கரவாதத்தை ஒடுக்குவதற்கென்றே கோடி கோடியாக டாலர்களை அள்ளிக் கொடுத்திருக்கிறது. அந்தப் பணமெல்லாம் ஆக்கபூர்வமாகச் செலவிடப்படாமல், பல பயங்கரவாத அமைப்புகளுக்கு மறைமுகமாக உதவவே பயனாகியிருக்கிறது! இதனை அமெரிக்க புலனாய்வு அறிக்கைகளே வெளிப்படுத்தியிருக்கின்றன.

பாகிஸ்தான் நிலைமை மேலும் மோசமாகிவிடுவதற்கு முன்பாக, இந்தியா சர்வதேச அரங்குகளில் மனுச் செய்து, அந்நாட்டில் தழைக்கும் அங்கீகரிக்கப்பட்ட பயங்கரவாதமும் அரசு கையாளும் மறைமுக பயங்கரவாதமும் ஒருசேர ஒழித்துக் கட்டப்படுவதற்குக் குரல் கொடுக்க வேண்டும்.

'இத்தகைய சவால்களைச் சொந்த தேசத்தில் சந்திப்பதே சுலபமல்ல; வேற்று நாட்டில் நம்மால் என்ன செய்துவிட முடியும்?' என்று ஒதுங்கி இருப்பது அபாயம். ஏற்கெனவே அல்கைதாவினர் பாகிஸ்தான் வழியே இந்தியாவுக்குள் வந்து நம் தேசத்தைக் குலைத்துக் கொண்டிருக்கின்றனர். இன்னும் பாகிஸ்தானில் குழப்பம் அதிகமாகி பயங்கரவாதத்துக்குப் புகலிடமும் உறுதியாகிறபோது, அத்தனை அபாயங்களும் இந்தியாவுக்குள்ளும் வெகு சுலபமாக நுழைந்து, நிலைமையை மேலும் மோசமாக்கும்.

பயங்கரவாதத்தை, சம்பிரதாய ராணுவ முறையில் எதிர்கொண்டு வெற்றி காண முடியாது. வருமுன் காக்கும் வகையில், அதனை எதிர்த்துப் போராட தனிப்பெரும்படை அமைத்து, பல்வகை சிறப்புப் பயிற்சிகள் தரப்பட வேண்டும்.

அதைவிடவும் முக்கியம், ஆட்சியில் இருப்போர் காண்பிக்க வேண்டிய அரசியல் சாணக்கியம். ●

# புள்ளிகள்... கோலங்கள்...

**புதிய ஒரு பக்கத் தொடர்...**

'புள்ளிகள்... புள்ளிகள்...
அழகான புள்ளிகள்...
கண்ணே நீ புள்ளிகள் வை...
அதில் காரியங்கள் பல நீ
செய்...
புள்ளிகள்... புள்ளிகள்...
சில புள்ளிகள்...
கோலங்களாகும்
பல புள்ளிகள்...
பாவங்களாகும்
கோலங்களும்...
பாவங்களும்
படைத்தவன்
எண்ணங்களே...
புள்ளிகள்... புள்ளிகள்...
அழகான புள்ளிகள்...'

-டி.வி.யில் 'புள்ளிகள் கோலங்கள்' மெகா தொடர் தலைப்புப் பாடலுடன் ஓடியது. கதாநாயகி கவியும், இரண்டு டஜன் டான்சர்களும் காடு, மேடு, கோயில், குளம் என்று சுற்றிச்சுற்றிப் பாடிக்கொண்டு வந்தனர். டைட்டில்ஸூம் அவர்களோடு சேர்ந்து சுற்றிவந்து, இயக்குநர்: பூபதி டி.எஃப்.டி. என்று முடிந்தது.

அமைதியாகக் கண்களை மூடித் திறப்பது போல் - எபிஸோட் 115 தோன்றி மறைந்தது.

''நேத்துதான் ஆரம்பிச்சது போல இருக்கு... அதுக்குள்ள ஆறுமாசம் ஓடிட்டுது!'' ஆச்சர்யப்பட்டுக் கொண்டார், தயாரிப்பாளர் பொன்ராஜ். உப்பு முதல் அப்பளம் வரை நிறைய தொழில் கண்டு வெற்றிக்கொடி நாட்டிவிட்டு, சின்னத்திரைப் பக்கம் பார்வையைத் திருப்பியிருந்தார்.

'நிறைய காசு புரளுமாம்ல' என்றார் குடும்பத்தினரிடம்.

கூட்டுக் குடும்பம். இரண்டு தம்பிகள், இரண்டு சகோதரிகள்.

தம்பிகள் ஒற்றுமையாயிருந்தார்கள்; அவர்கள் மனைவிமார்களும். ஆண்கள் தொழில் செய்துகொண்டு வந்ததைப் பெண்கள் சிக்கனமாய்ச் செலவழித்து, பொக்கிஷமாய்ச் சேர்த்தனர். குழந்தைகளுக்குக் குறைவில்லை; எழுபது வயது அம்மாதான் சந்ததிகளை வழிநடத்தினார். சீரியல் எடுக்கும் முயற்சிக்கும் அந்த அம்மாவின் ஆசி கிடைத்தது.

''நீ தவிட்டுல கை வச்சாலும் அது தங்கமாகுமே ராசா. டி.வி. நாடகம் மட்டும் கைவிட்ருமா! நல்ல கதையா எடு. மக்களுக்குப் பொழுதுபோக்கா இருக்கணும், கருத்துச் சொல்றாப்லயும் இருக்கணும்'' என்றார்.

இதர தொழில்கள் துவங்கும் போது குடும்பத்தில் நிலவும் எதிர்பார்ப்பும் மகிழ்ச்சியும், தொடர் எடுக்க பூஜை போட்டபோது, இரண்டு மடங்காகப் பிரதிபலித்தது - ஒரு நபருக்கு மட்டும் பொறாமை பொசுங்கியது. அது...!

(தொடரும்)



■ பருதலம் சுகுமாரன்




# அல்லயன்ஸ்



(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ் புத்தக நிறுவனம்)

## 14 நாட்களுக்கு - 10% கழிவு

4-1-08 முதல் 17-1-08 சென்னைப் புத்தகக் காட்சியிலும்,
14-1-08 துக்ளக் ஆண்டு விழாவிலும்...

சோ எழுதிய

| மஹாபாரதம் பேசுகிறது | வால்மீகி ராமாயணம் | ஹிந்து மஹா சமுத்திரம் |
| --- | --- | --- |
| (இரண்டு தொகுதிகள்) | (இரண்டு தொகுதிகள்) | (மூன்று தொகுதிகள்) |
| ரூ. 600/- | ரூ. 600/- | ரூ. 600/- |

**அதிர்ஷ்டம் தந்த அனுபவங்கள் ரூ. 140/-**

மற்றும் பிற நூல்கள்

எஸ். குருமூர்த்தியின்

**தண்ணீர் விட்டோ வளர்த்தோம்**

(மூன்று தொகுதிகள் - ரூ. 525/-)

பரத்வாஜ் எழுதிய

**ஆட்சி முறை**

-ஒரு பார்வை ரூ. 200/-

எஸ்.வி.வி., தேவன், பி.ஸ்ரீ., கி.வா.ஜ., அநுத்தமா, எண்டமூரி வீரேந்திரநாத், வி.ஸ. காண்டேகர், பி.என். பரசுராமன், எஸ்.வி.சேகர், கோட்டயம் புஷ்பநாத், பி.எஸ்.ராமையா, யத்தன்னபூடி சுலோசனாராணி, சிவன் எழுதிய உலகப் புகழ்பெற்ற கதைகள், வடுவூர் கே. துரைசாமி ஐயங்கார், ரா.கி. ரங்கராஜன், மெரீனா, சத்யா, சமஸ்கிருத நாடகங்கள் (தமிழில்), தேச பக்தர்கள் வரிசை, சிவகுமார் எழுதிய இது ராஜபாட்டை அல்ல, நடிகர் சூர்யா எழுதிய இப்படிக்கு சூர்யா.

மற்றும்

அனைத்து அல்லயன்ஸ் நூல்களுக்கும்

**STALL NO. P-16**

# ரயிலில் வராத

படகின் மறுபக்கத்தில் அரவிந்தன் இருப்பது தெரியாமல் அந்த இளைஞன், ''சே, அஞ்சு மணிக்கு வரச் சொல்லிட்டு இன்னமும் வரலேன்னா எப்படி?'' என்று எண்ணத்தின் அழுத்தம் தாங்காமல் வார்த்தைகளை உதிர்த்துவிட்டான். வந்தது வினை.

விறுவிறுவென்று படகின் மறுபக்கத்தை அடைந்தான் அரவிந்தன். ''யாருக்காகக் காத்திருக்கீங்க? காதலிக்கா?'' என்றபடி அந்த இளைஞனுக்கருகே அமர்ந்தான்.

அந்த இளைஞன் அதைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. சொல்லப் போனால் தான் சலித்துக்கொண்டது பிறரின் காதுகளை எட்டக்கூடும் என்பதையே அவன் அப்போதுதான் உணர்ந்தான்.

இது குறித்தெல்லாம் கவலைப்படாமல் அரவிந்தன் தன் வலது கையை அவன்புறமாக நீட்டினான். ''நான் அரவிந்தன்'' என்றான். அந்த இளைஞனும் அவனது கையைப் பற்றியபடி, ''கார்த்திக்'' என்றான்.

அடுத்த நொடியே கார்த்திக்கின் முகத்தில் ஒரு புரிந்துகொண்ட தன்மை தோன்றியது.

''நீங்களும் உங்க காதலிக்காகக் காத்துக்கிட்டு இருக்கீங்க. சரியா?'' என்று கேட்டான்.

அரவிந்தன் தொடர்ந்து சிரித்தான். சிரிப்பின் நடுவே ''ஸ்டுப்பிட்'' என்ற ஒற்றை வார்த்தையை உதிர்த்தான்.

கார்த்திக்கின் முகம் சிவந்தது. தொடர்பில்லாத ஒருவன் தானாக ஒரு கேள்வியைக் கேட்டு பதிலை வாங்கிக் கொண்டதுடன், தன்னை முட்டாள் என்றும் விமர்சிக்கிறானே!

''என்ன சார், காதல் தோல்வியா? அதுதான் வார்த்தை வேகமா விழுது'' என்றான்.

அரவிந்தனிடமிருந்து மீண்டும் சிரிப்பு எழுந்தது. ''மிஸ்டர் கார்த்திக், உங்களால ஒருமுறைகூட சரியா யூகம் செய்ய முடியாதா?'' என்றான் எள்ளலுடன். பிறகு, ''நான் ஸ்டுப்பிட்னு சொன்னது உங்க காதலைப் பற்றி இல்ல. இப்படி நேரத்தை வீணடிக்கிறீங்களே, அதுக்குத்தான்'' என்றான்.

சினத்தையும் தாண்டி வியப்பு ஏற்பட்டது கார்த்திக்குக்கு. இவனும் தன் வயதுக்காரனாகத்தான் இருக்க வேண்டும். காதலர்கள் என்றால் சென்னையில் இருந்துகொண்டு கடற்கரையில் சந்திக்காமல் இருக்க முடியுமா?

அதைப் புரிந்துகொண்டதுபோல் அரவிந்தன் பேசத் தொடங்கினான். ''காதலர்களின் கடற்கரைச் சந்திப்பு எந்த அளவுக்கு எதிர்பார்க்கக்கூடியதோ, அதே அளவுக்கு காதலிக்காக காத்திருப்பதும் எதிர்பார்க்கக்கூடியதுதானே. படிப்பதற்கு ஏதாவது நல்ல புத்தகத்தை எடுத்து வந்திருக்கலாம். அல்லது டைரியைக் கொண்டு வந்திருந்தால் அதை நிரப்பியிருக்கலாம். அடுத்த நாட்களில் என்ன செய்யலாம்னு திட்டமிட்டிருக்கலாம்.''

'என்ன... என்ன பேசுகிறான் இவன்? காதலிக்காகக் காத்திருக்கும்போது காதலியைத் தவிர வேறு எதையாவது நினைக்கத் தோன்றுமா?' காரசாரமாக தான் நினைத்ததை அவன் வெளிப்படுத்துவதற்கு முன் அரவிந்தன் எழுந்து

கேமரா கதை 1

# போதி மரம்!

## அருண் சரண்யா



கொண்டான்.

''எனக்கு நேரமா யிடுச்சு. வரேன். அடுத்த முறையாவது நான் சொன்னதை மறந்துடா தீங்க.'' நகரத் தொடங்கி னான்.

கடற்கரையிலிருந்து வீட்டுக்குத் திரும்பும்போதே அதே போன்றதொரு ஆலோசனையைத் தான் வேறொரு வருக்கும் அளிக்க வேண்டியிருக்கும் என்று அரவிந்தன் எதிர்பார்த்திருக்க வில்லை.

சிக்னலை நெருங்கும்போது பச்சை வண்ணம் மின்னல் வேகத்தில் ஆரஞ்சு ஆகி, பின் சிவப்புக்கு மாறி யது. அரவிந்தனோடு அவனுக்குப் பக்கத்தில் மோட்டர்பைக்கில் வந்து கொண்டிருந்த ஒருவனும் தன் வண்டியை நிறுத்தும்படியானது. அவனுக்குப் பதினெட்டு வயதுதான் இருக்கும். குளிர்க் கண்ணாடி அணிந் திருந்தான்.

பொறுமையின்றி அவன் தவிப்பது அப்பட்டமாகத் தெரிந்தது. 'சனியன் பிடிச்ச சிக்னல்' என்று அலுத்துக் கொண் டான்.

''இதனாலெல்லாம் சிக்னல் சீக்கி ரமா மாறிடாது தம்பி. தவிர, உனக் குத்தான் இரத்தக் கொதிப்பு அதிக மாகும்'' என்ற அரவிந்தனை எரிச்சல் பொங்கப் பார்த்தான் அவன்.

''நான் பத்து மணிக்கு ஒரு இடத்திலே இருந்தாகணும்'' என்றான்.

''இனிமேல் எந்த வழியாகப் போனால் சீக்கிரம் போகலாம் என்பதை யோசி. தாமதமாகப் போனால் அந்த நிலைமையை எப்படிச் சமாளிக்கலாம்னு யோசி. இப்படிக் காத்திருக் கும் நேரத்தை பயனுள்ளதாக ஆக்கிக்கணும்.''

இதற்குள் சிக்னல் கிடைத்துவிட, தலையை லேசாக ஆட்டியபடி, விட்டால் போதுமென்று அவன் நகர்ந்து விட்டான்.

பெங்களூரு மெயில் குறித்த நேரத்துக்கு வந்துகொண்டிருந்தது. நிலைக்கு வரவிருக்கும் தேர்போல தன் வேகத்தைக் குறைத்துக்கொண்டு வந்தது. அதிஷ்டக்கார ரயில். ரம்யாவைச் சுமந்து வருகிறதே.

இரண்டு மாதங்களுக்கு முன்புதான்




அரவிந்தனின் அலுவலகத்தில் சேர்ந்தாள். சராசரியைவிட அதிக அழகி. பல விஷயங்களில் இருவரது ரசனைகளும் ஒத்துப்போயின. ஒத்துப்போகாதபோதும் அதற்கான விவாதங்களை இருவருமே ரசித்தனர்.

சமீப காலமாக அவன் விவாதம் செய்வதைப் பெருமளவில் குறைத்துக் கொண்டிருந்தான். காரணம் அவள் மீது அவன் கொண்டிருந்த ஈடுபாடு அல்லது ஈர்ப்பு அதிகமானதுதான்.

அந்த உலகப் புகழ்பெற்ற மூன்று ஆங்கில வார்த்தைகளை அவன் கூறிவிடவில்லை. என்றாலும், அவளும் அவனை நேசிப்பதாகத்தான் தெரிந்தது. அவசரப்படக் கூடாது. இன்னும் சில மாதங்களாவது இப்படியே கடத்தி, பிறகுதான் காதலை வெளிப்படுத்த வேண்டும். இப்படிக் காத்திருக்கும் கணங்களின் இன்ப அவஸ்தையை இழந்துவிடக் கூடாதெனத் தீர்மானித்தான்.

போன வாரம், ''அரவிந்த், நான் பெங்களூருக்குப் போய் அம்மாவை அழைச்சிக்கிட்டு வரப்போறேன். லக்கேஜ் அதிகமாக இருக்கும். கால் டாக்ஸிக்குச் சொன்னால் ஸ்டேஷனுக்கு வருமா? ஒருவேளை ரயில் கொஞ்சம் முன்பின் வந்தாலும் வெய்ட் பண்ணுவாங்களா?''

''கவலையை விடுங்க. நான் வந்து உங்களை ரிசீவ் பண்ணிக்கிறேன்'' என்றான். வரவர ரம்யாவை மரியாதையுடன் அழைப்பது பிடிக்கவில்லைதான். ஆனாலும் என்ன செய்ய?

விடியற்காலையில் ஸ்டேஷனுக்குத்தான் சொன்னபடி வந்திருக்கிறான்.

ஆனால், ரம்யா சொன்னபடி வரவில்லை.

அடுத்த பதினைந்து நிமிடங்களுக்குக் கண்களால் பிளாட்பாரம் முழுவதும் சலித்துவிட்டான். ரம்யா இல்லை. தான் நிச்சயம் தவறவிட்டிருக்க மாட்டோம் எனும் உறுதி ஏற்பட, ரம்யா வராததற்கு ஏதோ ஓர் அழுத்தமான காரணம் இருக்க வேண்டும் என்று புலப்பட்டது. கடைசி

மணிரத்னத்தின் உதவியாளராக இருந்த கண்ணன் இயக்கும் 'ஜெயம் கொண்டான்' படத்தின் காட்சிதான் முன்பக்கத்தில் இருப்பது.

''சத்யஜோதி ஃபிலிம்ஸ் தியாகராஜன் சார் தயாரிக்கும் ஜெயம்கொண்டானில் வினய்தான் ஹீரோ. பாவனா ஜோடி. அழகான, அதே நேரத்தில் நெகிழ்வான கதையாக மலரவிருக்கிறது படம். படப்பிடிப்பு விரைவாக நடந்து வருகிறது. என் குருநாதரிடம் நான் கற்றவற்றையும் என் அனுபவத் தொகுப்பையும் இணைத்து நேர்த்தியான படத்தைத் தர முயற்சிக்கிறேன். இறுதித் தீர்ப்பு எப்போதும்போல் ரசிகர்களுடையதுதான். இந்தச் சிறுகதையின் நாயகன் உணரும் கடைசிக் கட்டத் தவிப்பும் துடிப்பும் அர்த்தம் பொதிந்தவை. அவன் மனமாற்றம் மிக அழுத்தமானது'' என்கிறார் கண்ணன்.

## என்ன சொல்கிறார் டைரக்டர்?



கணத்தில் நேர்ந்த அந்த திடீர் சம்பவம் எதுவோ? தன்னிடம் தொலைபேசியில் சொல்லக்கூட முடியாத அளவுக்கு அவசரமான அந்த விஷயம் என்னவாக இருக்கும்?

உடனடியாகத் தனது செல்போனை எடுத்து அவளது எண்ணைத் தொடர்பு கொண்டான். கிடைக்கவில்லை. பிஸியாக இருந்தது.

அவளது அம்மாவுக்கு ஏதாவது? அல்லது ரம்யாவுக்கே ஏதோ விபத்தோ? படபடப்பு ஏற்பட்டது. யோசித்தபடியே ரயில் முழுவதையும் கடந்து எஞ்சியிருக்கும் நடைபாதைக்கு வந்துவிட்டிருந்தான். அங்கிருந்த பெஞ்சில் உட்கார்ந்தபடி மீண்டும் செல்போனை எடுத்து முயற்சித்தான். இம்முறை அவள் குரல் கிடைத்தது.

''ரம்யா, அரவிந்தன் பேசுறேன். என்ன ஆச்சு?''

''ஒண்ணும் ஆகலையே''

குழப்பத்துடன், ''இன்னைக்கு பெங்களூர் மெயில்ல வர்றதாகச் சொல்லியிருந்தியே. நான் ஸ்டேஷனிலிருந்து பேசுறேன்.''

''ஏய், எனக்கும் கொஞ்சம் மெஹந்தி பாக்கி வை'' என்று யாரிடமோ அவள் கூறுவது கேட்டது. பிறகு, ''என்னுடைய சிநேகிதிக்கு நிச்சயதார்த்தம் அரவிந்த். அதனால இன்னும் ரெண்டுநாள் கழிச்சுத்தான் வருவேன். உன் கிட்டே சொல்ல மறந்துட்டேன்... சிநேகா, இந்த ட்ரெஸ் எனக்கு எப்படி இருக்கு? நேத்து மல்லேஸ்வரத்துல வாங்கினது... சரி அரவிந்த், சென்னையில அப்புறமாப் பார்க்கலாம்.''

சட்டென வெறுமை உணர்வு படர்ந்தது. இது உண்மையாக இருக்காது என்று தோன்றியபோதே, உண்மைதான் என்பதும் விளங்கியது. தொடர்ந்து பத்து நிமிடங்களுக்கு அந்த பெஞ்சிலேயே அசைவற்று அமர்ந்திருந்தான். பின் தெளிவு ஏற்பட்டது. வேறு எதையாவது நினைக்கலாமே என்று முடிவெடுத்தபோது கார்த்திக்கின் நினைவு வந்தது. 'என்ன சார், எதுக்காக காத்துக்கிட்டு இருக்கீங்க? நேரத்தை வீணாக்காமல் இருக்க ஏதாவது புத்தகத்தைக் கொண்டு வந்து படித்திருக்கலாமே' என்று அவன் கிண்டலாகக் கேட்பதுபோல் இருந்தது.

அரவிந்தன் முகத்தில் ஒரு புன்னகை விரிந்தது. அதில் வருத்தம் கொஞ்சம் இருந்தாலும் அதிர்ச்சி அறவே நீங்கி விட்டிருந்தது.

'வீணாகவா? இதைவிடப் பயனுள்ள பொழுது என் வாழ்நாளில் இருந்து விடுமா என்ன?' ●



# ரிமோட் உங்கள் கையில்!

''இன்றைய உலகத்தில் மனிதர்கள் எப்போதும் பரபரப்பாக இருக்கின்றார்கள். அவர்களுக்கு எதனையும், எங்கேயும் நின்று, நிதானமாக ரசிக்கக்கூட நேரமில்லை. உலக மெங்கும் இயற்கைக் காட்சிகள் கொட்டிக் கிடக்கையில், தங்கள் வீட்டுக்குள்ளே சுவற்றில் இயற்கைக் காட்சிகளை ஒட்டிவைத்து ரசித்து ஆனந்தமடைகிறார்கள்'' என்று அர்த்தத்துடன் பேசுகிறார், கர்நாடக மாநிலம் சகடபுரத்தில் அமைந்துள்ள ஸ்ரீவித்யா பீடாதிபதி ஸ்ரீ கிருஷ்ணானந்த தீர்த்த மகா சுவாமிகள். இவர் தற்போது சென்னையில் முகாமிட்டிருக்கிறார்.



சகடபுரம் ஸ்ரீவித்யா பீடத்தின் முப்பத்திரண்டாம் பீடாதிபதி ஸ்ரீ ராமசந்திரானந்த தீர்த்த மகா சுவாமிகள், தமது கடைசி காலத்தில் சென்னை கிழக்கு தாம்பரத்தில் வசித்தார். ஒரு பக்தர் வழங்கிய நிலத்தில் ஆசிரமம் ஒன்றையும், ராஜராஜேஸ்வரி கோயிலையும் நிர்மாணித்து சித்தி அடைந்தார். அதன் பிறகு பீடாதிபதியாகப் பொறுப்பேற்றவர்தான் தற்போதைய சுவாமிகள்.

தமது குருநாதரிடமிருந்து பதின்மூன்றாவது வயதில் சன்னியாச தீட்சை பெற்றார். சுமார் பன்னிரண்டு வருட காலம் நாடு முழுவதும் யாத்திரை மேற்கொண்டவர்.

''இன்று அத்தனை பேர் வீடுகளிலும் வந்து உட்கார்ந்துகொண்டு நேரத்தையும், மனத்தையும் கெடுத்துக்கொண்டிருக்கிறது டி.வி. முன்பெல்லாம் கடைக்குப் போய், நமக்குத் தேவையான பொருள்களைச் சொல்லி வாங்கிக்கொண்டு வருவோம். ஆனால், இன்று சூப்பர் மார்க்கெட் கலாசாரம் வந்துவிட்டது. நமக்கு வேண்டியது, தேவையில்லாதது எல்லாவற்றையுமே அங்கே வைத்திருக்கிறார்கள். நாம்தான் பொறுப்புடன் நமக்கு என்ன அவசியமோ அதை மட்டும் வாங்கிக் கொண்டு வர வேண்டும். அதுபோலத்தான் டெலிவிஷனும். அவர்கள் பாட்டுக்கு இருபத்தி நான்கு மணி நேரமும் எதையாவது காட்டிக் கொண்டேதான் இருப்பார்கள். நாம் எது அவசியமோ, நமது ரசனையை எது உயர்த்துமோ, அவற்றை மட்டும் பார்ப்பதற்கு மனதைப் பழக்கப்படுத்திக்கொள்ள வேண்டும். குழந்தைகளுக்கு எது நல்லதோ, அவற்றை மட்டும் குழந்தைகள் பார்க்கச் செய்ய வேண்டும். வீட்டில் டி.வி. இருக்கிறது என்பதற்காக அதை நாள் முழுக்க ஓட வைப்பதோ, டி.வி. ஓடிக்கொண்டிருக்கிறதே என்பதற்காக அதன் முன்னால் உட்கார்ந்து பார்த்துக்கொண்டிருப்பதோ தவறு. இதனால் நேரம் வீணாகும். மனசு கெடும். டி.வி.யை நிறுத்துகிற ரிமோட் உங்கள் கையில்தான் இருக்கிறது என்பதை மறக்காதீர்கள்'' என்கிறார் கிருஷ்ணானந்த தீர்த்த சுவாமிகள்.

**– எஸ்.சந்திரமௌலி**

*Wish you all a happy & Prasperaus New Year 2008*



# P.R. JEWELLERY



## GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES

Old No. 102, New No. 138, USMAN ROAD, T.NAGAR, CHENNAI - 600 017.
PH : 24344442, 24327764. Proprietor: P. RAVINDHIRAN

**TUESDAY HOLIDAY**
**Timings : 10.00 AM to 1.30 - 3.30 to 8.00 PM**

## வாடிக்கையாளர்கள் அனைவருக்கும் பொங்கல் வாழ்த்துக்கள்

22ம் ஆண்டில் வெற்றிநடை போடும் நாங்கள் வாடிக்கையாளர்கள் அனைவரையும் குறைந்த செலவில் பயன்பெற வருக வருக என வரவேற்கிறோம். ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை P.R. ஜ்வல்லரி. எங்கு ஜோதிடம் பார்த்தாலும் P.R. ஜ்வல்லரிக்கு வந்து ரூபாய் 500/-க்கு ராசிக்கல் மோதிரம் வாங்கி பயன் பெறுங்கள். கல் ஒரிஜினல் என முழு உத்திரவாதம் தருகிறோம். எங்களிடம் பெங்சூய், சீன வாஸ்து பொருட்கள் குறைந்த விலையில் கிடைக்கும். அதிர்ஷ்ட சீனக் காசுகள். சிகப்பு ரிப்பனினால் கட்டப்பட்ட 3 ஐ சிங் காசு வைப்பதால் பண வாய்ப்புகள் பெருகும்.

எல்லாவயதினரும் பர்ஸ், பாக்கெட், ஹேண்ட் பேக், சூட்கேஸ், கல்லாபெட்டி, பீரோ, பாதுகாப்பு பெட்டகம் போன்ற எல்லா இடங்களிலும் வைக்கலாம். விலை ரூபாய் 30/- தபாலில் பெற ரூ. 60/- M.O. அனுப்பவும். மேலும் எங்களிடம் சீன வாஸ்து பிரமிடு, மூங்கில்செடி, பாகுவா கண்ணாடி, தொங்கும் மணிகளும் காசுகளும், செல்வத் தவளை, தங்க இன்காட், இரட்டை மீன்கள், செல்வக்குபேரர், குழந்தை செல்வம் தரும் குபேரர், கிரிஷ்டல் பால், திருஷ்டியை போக்கி சகல செல்வங் களையும் தரும் வெள்ளெருக்கு விநாயகர் அனைத்தும் கிடைக்கும். தபால் எழுதினல் முழுவிபர பாம்லெட் அனுப்புகிறோம்.



செல்வத் தவளை

| | | |
|---|---|---|
| மேஷம், விருச்சிகம் | - | பவழம் |
| ரிஷபம், துலாம் | - | வைரம் |
| மிதுனம், கன்னி | - | மரகதபச்சை |
| கடகம் | - | முத்து |
| சிம்மம் | - | மாணிக்கம் |
| தனுசு, மீனம் | - | புஷ்பராகம் |
| மகரம், கும்பம் | - | நீலம் |



செல்வக் குபேரர்

எங்களது சிறப்பு பேட்டியை விஜய் T.V. யில் திங்கள் காலை 9.00 மணிக்கும் புதன் காலை 9.45 மணிக்கும் புதன் இரவு 12.00 மணிக்கும் பார்க்கவும்.

## பல படங்களில் கதாநாயகனாக நடித்த சிவகுமாரை வில்லனாக நடிக்க வைத்த வருத்தம் எனக்கு இருந்தது!

ஏவி.எம்.மில் தயாரிப்பு நிர்வாகியாக இருந்த என்.எஸ்.மணி படம் தயாரிக்க முடிவு செய்தார். அவருக்காக எழுத்தாளர் மகரிஷி எழுதிய 'புவனா ஒரு கேள்விக்குறி' நாவலின் உரிமையை வாங்கினோம். கதையில் நல்லவன் போலத் தோற்றமளிக்கும் ஹீரோ உண்மையில் கெட்டவன். கதையின் முற்பகுதியில் யாரை கெட்டவன் என்று நினைக்கிறோமோ, அவர்தான் நல்லவர்.

வில்லங்கமான ஹீரோ, ரோலில் சிவகுமாரை நடிக்கச் சொன்னவுடன், சற்று பின்வாங்கினார். 'நான் ஹீரோவாக நடித்துக்கொண்டிருக்கிறேன். நெகடிவ் ரோலில் நடித்தால் மக்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்களே!' என்று கூறினார். 'இந்தக் கதையில் நீங்கள்தான் உண்மையான வில்லன் என்று தெரிய வரும்போது, ரசிகர்களுக்கு அது எதிர்பாராத திருப்பமாக இருக்கும். கவலைப்படாமல் நடியுங்கள்' என்று சொன்னவுடன், அவர் நடிக்க ஒப்புக்கொண்டார். என் இயக்கத்திலேயே கதாநாயகனாகப் பல படங்களில் நடித்த சிவகுமாரை, வில்லனாக நடிக்க வைக்கிறோமே என்று இலேசான வருத்தமும் எனக்கு இருக்கவே செய்தது.



அதுவரை வில்லன் ரோல்களில் நடித்துக் கொண்டிருந்த ரஜினிக்கு இந்தப் படத்தில் நல்ல வேடம். மேலோட்டமாகப் பார்த்தால் வில்லன்; ஆனால், நண்பனுக்காகத் தம் நல்ல பெயரையும் தியாகம் செய்வார். ரஜினியிடம் விஷயத்தைச் சொன்னோம். 'உங்களுடைய ஸ்டைலான நடிப்புக்கும் அப்பால், திறமையை வெளிப்படுத்த மிகச் சிறந்த வாய்ப்பாக இந்தப் படம் இருக்கும். இதன் மூலமாக மக்கள் மனத்தில் உங்களுக்கு ஒரு நல்ல இடம் கிடைக்கும்' என்றதும், மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்டார்.

இப்போது ரஜினி பஞ்ச்



எஸ்.பி.முத்துராமன்

# சும்மா வந்ததா சூப்பர் ஸ்டார் பட்டம்?




டயலாக் பேசும்போது தியேட்டரில் கைதட்டல் வானைப் பிளக்கிறதில்லையா? 'புவனா ஒரு கேள்விக்குறி' படத்தில் அவர் தம்முடைய கேரக்டரை நன்றாக உள்வாங்கிக்கொண்டு, திறமையான நடிப்பை வெளிப்படுத்தியபோதும் பல காட்சிகளில் ரசிகர்கள் அவரது வசனங்களையும் நடிப்பையும் கைதட்டி ரசித்தார்கள்.

ஏவி.எம்.மில் பணியாற்றிய லட்சுமி நாராயணன் எனக்கு காட்ஃபாதர். அவர்தான் படப்பிடிப்பின்போது, நடிகர்களுக்கு வசனம் சொல்லிக் கொடுக்கும் வாத்தியார். முதல் நாள் படப்பிடிப்புக்கு ரஜினி வந்தவுடன், லட்சுமி நாராயணனை அவருக்கு அறிமுகப்படுத்தி வைத்தோம். ரஜினிக்கு அவர் வசனங்களைப் படித்துக் காட்டினார்.

சிறிது நேரத்திலேயே நாராயணன் என்னிடம் வந்துவிட்டார். ''சார்! ஒரு சிக்கல்'' என்றார். '' 'எனக்குக் கொடுத்திருக்கிற வசனம், பாலசந்தர் மொத்த படத்துக்கும் கொடுத்த வசனங்களைவிட அதிகமாக இருக்கிறது' என்று ரஜினி தயங்குகிறார்'' என்று என்னிடம் கூறினார்.

ரஜினியிடம் பொறுமையாக, ''நீங்கள் பேச வேண்டிய வசனங்கள் நிறைய இருந்தாலும், அவை எல்லாவற்றையும் ஒரே மூச்சில் பேச வேண்டும் என்கிற கட்டாயமில்லை. உங்களால் எந்த அளவுக்குப் பேச முடிகிறதோ, அந்த அளவுக்குப் பேசுங்கள். அதற்குத் தகுந்தாற்போல நான் ஷாட்டுகளை அமைத்துக் கொள்கிறேன்'' என்று சொன்னதும்தான் மனிதர் சகஜ நிலைக்குத் திரும்பினார். அன்று,

## ரசிகர் மன்ற ராஜாக்கள்

திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த செந்தில், முதன்முறையாக சென்னைக்கு வந்ததே ரஜினியைப் பார்க்கத்தான். ரஜினி நடிப்பின் மீது கொண்ட ஈடுபாட்டோடு, அவருடைய சமூக சேவையும் இவரை ரஜினியை நோக்கி ஈர்த்திருக்கிறது. சென்னைக்கு வந்து ரஜினியைப் பார்க்கும் இவரின் முதல் முயற்சி தோல்வியில்தான் முடிந்திருக்கிறது. ரஜினியைச் சந்திக்காமலே ஊருக்குத் திரும்பியதால் மனம் இருப்புக் கொள்ளவில்லை. பத்து மாதங்கள் கழித்து மீண்டும் சென்னைக்கு வந்திருக்கிறார். அப்போதும் ரஜினியைப் பார்க்க முடியாததால், எப்படியாவது பார்த்துவிட வேண்டும் என்ற வைராக்கியத்தில் இங்கேயே ஒரு வேலை பார்த்துக் கொண்டு இருந்துவிட்டார். தம்முடைய குடும்ப வறுமைச் சூழலால் படிக்க முடியாமல் போனதால், அவருடைய கிராமத்தில் படிப்பு என்று யார் வந்து நின்றாலும் தம்மால் முடிந்த உதவியைச் செய்துவிட்டுத்தான் மறு வேலை பார்ப்பார்.

"மனுஷனுடைய வாழ்க்கையில் படிப்பு ரொம்ப முக்கியங்க. படிப்பு மட்டும்தான் ஒருத்தனை முழு மனுஷனாக்கும்" என்று சொல்லும் இவர், தம்முடைய சம்பளத்தில் குறிப்பிட்ட தொகையை ஆதரவற்றோர்களுக்காக நடத்தப்படும் பள்ளிகளின் வளர்ச்சிக்காகக் கொடுத்து வருகிறார். 'இதுபோன்ற மனித நேயச் செயல்களே மனத்தைத் தூய்மையாக்கும்' என்பது இவரது அபிப்ராயம். சரி, ரஜினியைச் சந்தித்தாயிற்றா என்றால், "சமீபத்துலதான் அது நடந்துச்சு. அவரு எவ்வளவு பெரிய ஆளு. ஆனா, அந்த பந்தா எதுவுமே இல்லாம ரொம்ப ஃப்ரண்ட்லியா பழகினார். இந்த எளிமைதாங்க அவரை உயரத்துக்குக் கொண்டு போயிருக்கு" என்று நெகிழ்கிறார். ●



எழுதிக் கொடுத்த வசனத்தைப் பேச முடியுமா என்று தயங்கியவர், இன்று தாமாகவே எத்தனை சரளமாக, ஸ்டைலாக வசனங்களைப் பேசுகிறார்! காரணம், அவரது ஈடுபாடு, உழைப்பு, தன்னம்பிக்கை. சும்மா கிடைத்ததில்லை 'சூப்பர் ஸ்டார்' அந்தஸ்து!

'புவனா ஒரு கேள்விக்குறி' படத்தில் ரஜினி உணர்வுபூர்வமாகப் பாடி நடித்த 'ராஜா என்பார், மந்திரி என்பார் ராஜ்ஜியம் இல்லை ஆள' பாடலை இப்போது பார்த்தால்கூட, நான் சொல்வதை நூற்றுக்கு நூறு ஏற்றுக்கொள்வீர்கள். ரஜினியையும் என்னையும் முதல் முறையாகச் சேர்த்து வைத்த 'புவனா ஒரு கேள்விக்குறி' ரஜினியின் திரையுலக வாழ்க்கையில் திருப்புமுனையை ஏற்படுத்தியது.

ரஜினி, கமல் இருவரையும் ஒரே படத்தில் நடிக்க வைத்த அனுபவம் இன்னும் சுவாரஸ்யமானது.

'புவனா ஒரு கேள்விக்குறி' படத்தின் படப்பிடிப்பு ஒருபக்கம் வேகமாக நடந்து கொண்டிருக்க, இன்னொரு பக்கம் கமல் - ரஜினி காம்பினேஷனில் ஒரு படம் செய்துகொண்டிருந்தேன். அதுதான் 'ஆடுபுலி ஆட்டம்'. இயக்குநர் மகேந்திரனின் கதை. இரண்டு பெரிய ஜாம்பவான்களை ஒரே படத்தில், ஒரே நேரத்தில் இயக்கிய அனுபவம் பெரும்பாலானவர்களுக்குக் கிடைக்காது. அப்படிப்பட்ட வாய்ப்பு கிடைத்தபோது நான் என்ன செய்தேன் தெரியுமா?

**(பயணம் தொடரும்)**

எழுத்து வடிவம் : **எஸ்.சந்திரமௌலி**

## கதை

புதுசா யோசிச்சிருந்தாலும்
அங்கங்கே பழைய வீச்சம்
அடிக்கிறதுதான் பிரச்னை.

## நடிப்பு

ரமேஷ் அசத்தறார்.
மல்லிகா மருள்றார்.
கருணாஸ் கலக்கறார்.

## இசை

கொத்து பரோட்டா
பாட்டுங்க காதுக்குள்ள
கும்மியடிக்குது.
ஸ்ரீகாந்த் தேவா... தேனா!

## திரைக்கதை

வேகம் இருக்கு. கொஞ்சம்
விவேகமாவும் ட்ரை
பண்ணியிருக்கலாம்.

## காமெடி

அதுதான் படத்துல
விசேஷமே. மனசு நிறைஞ்சு
போகுது சிரிச்சு சிரிச்சு.

## ஒளிப்பதிவு

நம்ம கண்களுக்கு ஐஸ்க்ரீம் ஒத்தடம்
தர்ற ராஜசேகர் கரங்களுக்கு
எதையாவது போடலாம்!

## இயக்கம்

நீரோடை மாதிரி தெரிஞ்சாலும் ஸ்பீடு
பிரேக்கர் ஜாஸ்தி. காமெடியா,
கதையான்னு குழப்பம் நிலவுது.

## நிறையும் குறையும்

கலகலன்னு இருந்து
பரபரன்னு நகருது படம்.
அழுத்தமில்லாத
கதையால பதிக்காமப்
போகுது தடம்.

## பன்ச்

புலி வருது... புலி
வருதுன்னு டைட்டில்ல
மிரட்டினாலும் பூனை
அளவுக்குக்கூட அதிர
வைக்கல...

- ரேவதி





# கண்ணா...

தந்தைக்கும் மகளுக்குமான உறவின் உன்னதத்தைச் சொல்ல வந்திருக்கும் படம். சீதாவின் கண்டிப்பும் பிரகாஷ்ராஜின் செல்லமுமாய் வளர்ந்து நிற்கும் மகள், காதல் பாதையில் சறுக்கி விழ நேர, சமாளித்து எழுந்தாளா, காதலனுடன் கலந்தாளா என்பதை பதைபதைப்புடன் காட்டியிருக்கிறார்கள்.

ஷீலாவுக்கு வெயிட்டான ரோல். ஓரளவு உணர்ந்தே செய்திருக்கிறார். ஊட்டியில் ஒவ்வோர் இடமாக மாட்டிக் கொள்ள, தவிக்கும் உணர்வுகளைத் தடுமாறாமல் தந்திருக்கிறார். சகதியில் விழுந்து புரண்டு, எல்லாம் உணர்ந்து, சலனமின்றி பயணிக்கும் காட்சி சக்தி வாய்ந்தது. பிரகாஷ்ராஜ் தனியொரு ஆளாக படத்தைத் தூக்கி நிறுத்துகிறார். மகளைக் காணாமல் பரிதவிக்கும்போது பாசம் இல்லாதவர்களைக்கூட நேசம் கொள்ள வைத்துவிடுகிறார். கல்லூரி முதல்வர் சபீதா ஆனந்த் கேள்விகளுக்கு மருகும்போதும், கிண்டல் செய்யும் இளைஞர்களிடம் சீறும்போதும் பிரமாதராஜ்.



அம்மாவாக வரும் சீதா, வீட்டுப் பறவை. மகளுக்காக உருகுகிறார்... உருகிக்கொண்டே இருக்கிறார். புதுமுகம் ராஜா, அழகாய் இருக்கிறார். நடிப்பும் வருகிறது. ஆனால், சீரியஸான காட்சிகளில்கூடச் சிரித்துக்கொண்டே இருப்பதுதான் உறுத்துகிறது. பேராசிரியராக வரும் லிவிங்ஸ்டன், காமெடிக்கு படு ஃபிட்.

ரஞ்சித் பரோட்டின் இசையில் இரண்டு பாடல்கள் இனிமை. தாஜ்மலின் ஒளிப்பதிவு ஊட்டியின் சந்து பொந்தெல்லாம் காட்டி குளுமைப்படுத்துகிறது. முதல் படத்திலேயே ரிஸ்க்கான சப்ஜெக்டைக் கையிலெடுத்ததற்காக டைரக்டர் ஆனந்தைப் பாராட்டலாம். க்ளைமேக்ஸ் கனகச்சிதம். தேர்ந்த முடிவைத் தந்தவர், கதாநாயகியை இவ்வளவு கேனத்தனமாகக் காட்டியிருக்க வேண்டாம். எந்தவித உறுத்தலும், பாதுகாப்பு குறித்த அக்கறையும் இன்றி ஊட்டியை அவர் வலம் வருவது மெகா ஓட்டை.

- அனாமிகா

# செல்வராஜிடம் ஒரு கேள்வி!

திருவாரூர் பாபு

செல்வராஜ் வீட்டின் முன் தயங்கி நின்றான். எப்பவும் வாசலில் இருக்கும் குப்பை வாளியை எடுத்துக்கொண்டு நான் நின்றிருந்தால் விஷ் செய்துவிட்டு, வேகமாக நகர்ந்து விடுவான். இன்று ஏன்?

டீ குடிக்கக் காசு எதிர்பார்க்கிறானோ!

சட்டைப் பையில் கைவிட்டேன். அது இல்லை என்கிற வகையில் செல்வராஜ் பேசினான்.

''அய்யா... என் பையன் ஆனந்தன் ரொம்பப் பிரச்னை பண்றான்யா. இந்த வாரம் முழுக்கச் சண்டை. கடைசி வீட்டுக்காரர் கிட்ட சண்டைக்குப் போயிருக்கான். வீட்டு வாசல்ல வந்து குப்பைய எடுன்னாராம். இவனுக்குக் கோபம் வந்து, அவர்கிட்ட சத்தம் போட்டிருக்கான். அவர் கம்ப் ளெயிண்ட் பண்ணிட்டார். கொஞ்ச நாளாவே அவன் சரியில்லை. நாளைக்கு அவன்தான் குப்பை எடுக்க வருவான். நீங்க அவனுக்குப் புத்திமதி சொல்லுங்க'' என்றான்.

செல்வராஜின் மகனும் துப்புரவுத் தொழி லாளிதான். இருவரும் மாறிமாறி வருவார் கள். வீடுகள், அப்பார்ட்மெண்டுகள் அனைத்திலும் நிறுத்தி நிறுத்திக் குப்பை சேகரிப்பார்கள்.

மாசா மாசம் தரும் இருபது ரூபாய் தவிர்த்து அவ்வப்போது ஐந்து பத்து என்று கொடுப்பதுண்டு. அதனால் என் மீது அவர் கள் மரியாதையாய் இருப்பார்கள்.

அடுத்த நாள் காலை சைக்கிள் மணிச் சத்தம் கேட்டபோது... வெளியே வந்தேன்.

செல்வராஜின் மகன் ஆனந்தன் குப்பை வண்டியைத் தள்ளிக்கொண்டு வந்தான்.

''ஆனந்தா... கொஞ்சம் வீட்டுக்குள்ள வா'' என்றேன்.

வந்தான்.

இவனை ஏன் வீட்டுக்குள்ளே என்பது மாதிரி புவனா என்னைப் பார்த்தாள்.

''என்ன ஆனந்தா... தெருவுல ஏதோ பிரச்னையாமில்ல. அப்பா நேத்து சொல்லிக் கிட்டு இருந்தாரு.''

ஆனந்தன் அமைதியாக இருந்தான்.

''ரெண்டு பேர் புகார் கொடுத்தா வேலைய விட்டு நிறுத்திடுவாங்க. ஏன் இது மாதிரி நடந்துக்கற?''

ஆனந்தன் என்னையே பார்த்துக் கொண் டிருந்தான்.

அவனது கண்கள் கலங்கின.

''அய்யா... எல்லா வீட்லயும் குப்பைய பாலிதீன் கவர்ல போட்டுத் தருவாங்க. சில வீட்டுல டைரக்டா குப்பை பக்கெட்டைத் தூக்கிக் கொடுக்கறாங்க. அதுல என்னென் னவோ அப்படியே கிடக்குங்கய்யா. உங்க கிட்ட சொல்றதுக்குக் கூச்சமா இருக்கு. நானும் மனுஷன்தானே. அதான் தெருமுனை வீட்டுல அன்னைக்குப் பிரச்னையாயிடுச்சு. அப்பாகிட்ட சொன்னா, அப்படித்தான் கொடுப்பாங்க, நாமதான் அட்ஜஸ்ட் பண் ணிட்டுப் போகணும்ங்கிறாரு.''

ஆனந்தன் கண்களில் இருந்து கண்ணீர் வழிந்தது.

எனக்கு ஒரு மாதிரியானது. காலடியில் இருந்த பக்கெட்டைப் பார்த்தேன். புவனா பாலிதீன் பாக்கெட்டில் போட்டுப் பக்கா வாகத்தான் வைத்திருந்தாள். இப்போதுதான் இப்படி ஒரு கோணத்தையே நான் யோசித் துப் பார்க்கிறேன்.

வாளியை எடுத்துக்கொண்டு போய் குப்பையைக் கொட்டிவிட்டுத் திரும்பக் கொண்டு வந்து கொடுத்தான்.

சில நாட்கள் சென்றிருக்கும், செல்வராஜ் மீண்டும் என்னிடம் தயங்கித் தயங்கி நின்றான்.

''என்ன செல்வராஜ்?''

''மறுபடி பிரச்னை. வெங்கடேசா நகர்ல ஒரு அம்மாகிட்ட சண்டை'' என்றான் சோகக்

குரலில்.

''அவனுக்கு வேற வேலை ஏதாச்சும் இருந்தா பாத்துக் கொடுங்கய்யா'' என்றான்.

செல்வராஜ் போனதும் நான் நீண்ட நேரம் யோசித்துக்கொண்டிருந்தேன். பத்து வயதுச் சிறுவன் ஏன் இப்படி நடந்து கொள்கிறான்? முரண்டு பிடிக்கிறான். ஒரு சமயம் தனக்குக் குப்பை அள்ளுவதில் உடன்பாடு இல்லை என்பதை வேறு வகையில் அப்பாவுக்கு உணர்த்துகிறானோ?

பளிச்சென்று எனக்கு அந்த யோசனை வந்தது.

வீட்டுக்கு வந்த செல்வராஜிடம் கேட்டேன்.

''வேலை முடிச்சிட்டியா?''

''முடிச்சிட்டேங்க. எல்லா குப்பையையும் கோயம்பேட்டுக்குக் கொண்டு போய் கொட்டிட்டு வந்துட்டேன்.''

''ஆனந்தன் என்ன பண்றான்?''

''ரெண்டு நாளா ஒழுங்கா குப்பை அள்ளிட்டு இருக்கான். ஆனா எந்த நேரத்துல புத்தி மாறுவானோ, தெரியல.''

அவனை ஒருமுறை உற்றுப் பார்த்து விட்டுக் கேட்டேன்.

''பையன ஏன் பள்ளிக் கூடத்துக்கு அனுப்பல செல்வா?''

''அதெல்லாம் சரிப்பட்டு வராதுங்க. ரெண்டு வருஷம் படிச்சான். அதுக்கு மேல என்னால முடியல. விதி! குப்பை அள்றவனுக்குப் பொறந்துட்டானே. எனக்கும் அவனைப் படிக்க வைக்க ஆசைதான். ஆனா வசதி இல்லையே.''

''நான் அவனைப் படிக்க வைக்கிறேன். ஒப்புக்கறியா..?''

''அதெல்லாம் வேணாங்கய்யா... வேஸ்ட்.''

''பையனுக்கு என்ன பிரச்னைன்னு கேட்டியே... அதான் பிரச்னை செல்வராஜ். எட்டு மணிக்கு அவன் குப்பை வண்டி தள்ளிட்டு வர்றப்ப அவன் வயசுப் புள்ளைங்க எல்லாம் யூனிஃபார்ம் போட்டுக்கிட்டு ஸ்கூல் பஸ்ஸுலயும் பேரண்ட்ஸ்கூட டூவீலர்லயும் போயிக்கிட்டு இருக்குதுங்க. எல்லாத்தையும் பாக்கற அவன் மனசுக்குள்ள ஏக்கம். ஸ்கூல் போற வயசுல குப்பை அள்றோமேன்னு ஆதங்கம். அதான் பல ரூபத்துல பிரச்னையா வருது. புரியுதா?

இன்னிக்கி நீ உன் புள்ளயை குப்ப அள்ள வைக்கிறது மாதிரி, நாளைக்கு உன் மகனும் அவன் புள்ளைய குப்பை அள்ளப் போடுவான். குப்பை அள்றதுதான் உங்க பரம்பரை வேலையா? நல்ல கௌரவமான வேற வேலை செய்யணும்னு உனக்குத் தோணலயா.''

நான் சொல்லச் சொல்ல செல்வராஜின் முகம் மாறியது. அவன் மௌனமாய் இருப்பதிலிருந்தே யோசிக்கிறான் என்பது புலப்பட்டது. கொஞ்ச நேரம் கழித்து மௌனம் கலைத்தான்.

''பிரச்னை என் மவன்கிட்டயும் கிடையாது; குப்பை போடுறவங்ககிட்டயும் கிடையாது, என்கிட்டதான் இருக்குதுங்கறது புரிஞ்சுபோச்சு. நான் வர்றேங்க'' என்றான்.

அன்று இரவு நிம்மதியாகத் தூக்கம் வந்தது. ●







4

**சுஜாதா**

# மோட்சத்துக்கு மார்க்கம்!

**நா**க்கு எங்கே இருக்கிறது? வாயில்... அதை வைத்துக்கொண்டு ஓயாமல் பேசிக்கொண்டிருக்கிறோம். ஓயாமல் பேச வேண்டும் என்றால் 'நமோ நாராயணா!' என்று பேசுங்களேன்! அப்படிச் செய்தால் திரும்பி வராமல் மோட்சத்துக்குச் செல்லலாமே. அதைவிட்டு ஏன் ஒருத்தர் தீய வழியில் செல்ல வேண்டும்?

இந்தக் கேள்வியை பொய்கையாழ்வார் தம் முதல் திருவந்தாதியில் கேட்டிருக்கிறார்.

*நா வாயில் உண்டே நமோ நாரணா என்று,*
*ஓவாது உரைக்கும் உரை உண்டே - மூவாத*
*மாக் கதிக் கண் செல்லும் வகை உண்டே; என் - ஒருவர்*
*தீக் கதிக் கண் செல்லும் திறம்?*

(ஓவாது - ஓயாமல், மூவாத - மீண்டும் பிறக்காத, மாக்கதி - மோட்சம், தீக்கதி - தீய வழி, திறம் - வகை)

அன்றாட வாழ்க்கையில் வாயை வைத்துக்கொண்டு சும்மா இருக்காமல் எதையாவது பேசிவிட்டு சிக்கல்களில் மாட்டிக்கொள்கிறோம். அப்போதெல்லாம் 'நமோ நாராயணா' என்று சொல்லிப் பாருங்கள், மோட்சத்துக்கு வழி தெரியும் என்கிறார். மாட்டோமே!

(படிக்கலாம்)

## புத்தக விமர்சனம்













**சிந்தனைச் சிப்பிகள் - வேமூரி பலராம், தமிழில் : டாக்டர் ஜே.வி. சத்யவாணி, ஆல்ஃபா லேண்ட் புக்ஸ் பி.லிட், 14, ஜெகன்னாதன் சாலை, நுங்கம்பாக்கம், சென்னை - 34. விலை ரூ.99.**

தெலுங்கு வார இதழான 'சுவாதி' பத்திரிகையில், அதன் நிறுவனரும் ஆசிரியருமான வேமூரி பலராம் எழுதிய தலையங்கக் கட்டுரைகளின் தொகுப்பு. வாழ்க்கை வயலில் காய்ந்த இதயங்களுக்கு, ஈரமான அணைப்பில், தன்னம்பிக்கையின் நறுமணத்தை உணர வைக்கிறார். கட்டுரைகள் ஒரு பக்கத்துக்குள் முடிந்தாலும், அது ஏற்படுத்தும் தாக்கம் பல நாட்களுக்கு நம் மனதில் தங்கும்.

**சின்ன வயதினிலே - மெரீனா, விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 2. விலை ரூ.55.**

# ஃப்ளாஷ்பேக் சந்தோஷம்!

இன்பம், துன்பம், சிரிப்பு, அழுகை என அனைத்தும் கலந்த தமது சிறு வயது அனுபவங்களை உயிர்ப்புடன் கட்டுரையாக்கியுள்ள மெரீனாவின் கைவண்ணம் சிலிர்க்க வைக்கிறது. கோபுலுவின் குறும்பு கொப்பளிக்கும் சித்திரங்கள் நூலுக்குக் கூடுதல் சிறப்பு. வாசிக்கும் போதே, நம்முள் படரும் நமது ஃப்ளாஷ் பேக் சந்தோஷத்துக்கு ஈடு இணை இல்லை.

**நேற்று? இன்று! நாளை!! - டாக்டர் என்.மணி, கே.எஸ். பப்ளிகேஷன்ஸ், 60, மடத்துத் தெரு, கும்பகோணம் - 1. விலை 60.**

சமூக மனநல விழிப்புணர்வுக்கான நூல். மனநலம் சார்ந்த விஞ்ஞான உண்மைகளைப் பற்றி மிக எளிய முறையில் விளக்கியுள்ளார் நூலாசிரியர். கற்பனைக் கதாபாத்திரங்களுடன் கூடிய கதைகள், புரிந்துகொள்ளக்கூடிய வகையில் விளக்கப்பட்டுள்ளன.

**புராணங்கள் கூறும் புண்ணியக் கதைகள் - பரமஹம்ஸ ஸ்ரீமத் பரத்வாஜ் ஸ்வாமிகள், திருவரக புத்தக நிலையம், 23, தீனதயாளு தெரு, தியாகராய நகர், சென்னை - 17. விலை ரூ. 45.**

எண்ணற்ற துன்பங்களை அனுபவிப்பவர்கள், நல் வினைகள் என்று சொல்லப்படும் ஒளி தீபத்தை ஏந்தினால், துன்பங்கள் விலகும் என்பதை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட கதைகள். உலகில் எப்படி வாழ வேண்டும், எப்படி வாழக் கூடாது என்கிற விவரம் சுவையான பதிவு.

**- மித்ரா**



# 'பில்லா'வைத் தவிர்த்த பூஜா!

பூஜா நடித்துச் சமீபத்தில் 'ஓரம் போ' வெளிவந்தது. அடுத்ததாக பாலாவின் 'நான் கடவுள்' வெளிவரவிருக்கிறது. ஆனால், இதெல்லாம் பூஜாவுக்கு ஜுஜுபி. சிங்கள மொழிப் படங்களில் இன்றைக்கு பூஜாதான் முன்னணிக் கதாநாயகி. 'அஞ்சலிகா' என்கிற இவரது முதல் சிங்களப் படம் சூப்பர் டூப்பர் ஹிட். அடுத்து வெளிவந்த 'அசய் மங்பியாபனா' முந்தைய படத்தின் வசூலை முந்திக்கொள்ள, இலங்கையில் பூஜா ஜுரம் எல்லோருக்கும் பற்றிக்கொண்டது. ஆனால், கூடவே விவகாரமும் தோன்றியது.



எப்படி தமிழ்ப் படங்களுக்கு கர்நாடகத்தில் கட்டுப்பாடுகள் இருக்கிறதோ, அதுபோல ஸ்ரீலங்காவிலும் ஒரு புதிய விதியைக் கொண்டு வந்திருக்கிறார்கள். அதாவது, சிங்கள நடிகர்கள் அல்லாது வெளிநாட்டு நடிகர்களை உபயோகப்படுத்தும் படங்களுக்குக் கூடுதல் வரி விதிக்கப்படும் என்று இப்போது அறிவிக்கப்பட்டுள்ளது. எல்லாம் பூஜாவின் திடீர் புகழால் உண்டான சட்டதிட்டங்கள்.

''எல்லாமே எனக்கு ஆச்சரியமா இருக்கு. என் தாத்தா, பாட்டி ஸ்ரீலங்காவுல இருக்காங்க. அவங்க திருப்திக்காகத்தான் நான் சிங்கள மொழியில படம் பண்ணினேன். ஆனால், என் படங்கள் இவ்வளவு பெருசா பேசப்படும், அதனால் சர்ச்சைகள் உருவாகும்னு நினைக்கவேயில்லை. இதனால இப்போ நிறைய சிங்களப் படங்கள்ல நடிக்க ஆரம்பிச்சிருக்கேன். சிங்களப் படங்கள் நம்ம தமிழ்ப் படம் மாதிரி கிடையாது. மசாலாப் படங்களை அங்க எடுக்க மாட்டாங்க. மலையாளப் படங்கள் மாதிரி கதையம்சம் கொண்டவை. சிங்களப் படங்கள்ல ஹீரோயின்கள்தான் ஹீரோக்கள்'' என்கிறார் பூஜா.

'நான் கடவுள்' ஆரம்பிக்கப்பட்டு ஒரு வருடம் கழிந்த பிறகு, அந்தப் படத்தின் புதிய கதாநாயகியாக அறிவிக்கப்பட்டிருக்கிறார் பூஜா.

ஏற்கெனவே ஒப்பந்தமான பாவனா விலகிக்கொண்டதால் பூஜாவுக்கு அடித்தது லக்கி ப்ரைஸ். ''எல்லாம் கடவுள் கிருபை. ஸ்க்ரீன் டெஸ்ட் எடுத்தப்போகூட நான் அவ்வளவு சீரியஸா இல்லை. ஆனா இன்னைக்கு நான்தான் பாலா படத்தோட ஹீரோயின். படம் வெளிவந்த பிறகு, எல்லோரும் கொண்டாடக்கூடிய படமா இருக்கும்'' என்கிற பூஜா, இதுவரைக்கும் ஆர்யாவுடன் நான்கு படங்களில் நடித்திருக்கிறார். '' 'நான்

கடவுள்' செட்ல என்னைப் பார்த்து ஆர்யா, 'இனிமே உன்னை என் படத்துல பார்த்தா தொலைச்சுடுவேன்'னு சொன்னார்'' என்று சிரிக்கிறார்.

**பி**ல்லா படத்துக்காக விஷ்ணுவர்தன் முதன்முதலாக அணுகியது பூஜாவைத் தான். ஆனால், தனக்குத் தண்ணீரில் கண்டம் என்று மறுத்துவிட்டார் பூஜா.

''ஸ்கூல்ல ஒரு சமயம் என்னைத் தண்ணில தள்ளிவிட்டுட்டாங்க. அதிலிருந்து தண்ணினா எனக்கு அவ்ளோ பயம். 'பில்லா' படத்துல பல காட்சிகள் கடல்ல தான் நடக்கும்னு விஷ்ணுவர்தன் சொன்னார். அப்பவே என்னால அந்தப் படம் பண்ண முடியாதுன்னு சொல்லிட்டேன்'' என்றவர், தமது திருமணம் பற்றியும் மறைக்காமல் பேசினார். ''வீட்ல மாப்பிள்ளை பார்க்கறாங்க. ஷூட்டிங் அது, இதுன்னு எனக்கான துணையை நானே தேர்ந்தெடுக்க முடியாமப் போச்சு. எல்லாம் நல்லபடியா முடியும். இப்போதைக்கு என் கவனம் எல்லாம் சினிமாலதான்'' என்கிற பூஜாவுக்கு டி.வி. மீடியா மீதும் அபார காதல்.

''ஓய்வு கிடைச்சா சேனல்ஸ்தான் என் ஃபேவரிட். சீரியல்ல தொடங்கி சுட்டிங்க ப்ரோக்ராம் வரைக்கும் எல்லாம் பார்ப்பேன். சமயங்கள்ல நானே சேனல் விளம்பரங்கள்ல வரும்போது ரொம்ப ரசிப்பேன். சினிமாவுல நடிக்கறதைவிட டி.வி. சீரியல்கள்ல நடிக்கிறது ரொம்ப கஷ்டமா இருக்கும்னு நினைக்கறேன். சினிமா, சீரியல்னு பிரிச்சுப் பேசறதுலயும் எனக்கு உடன்பாடில்ல. ரெண்டுமே ஒண்ணுக்கொண்ணு குறைஞ்சது இல்லை. சமீபத்துல 'மானாட மயிலாட' நிகழ்ச்சியில ஜட்ஜா கலந்துக்கிட்டது லவ்லியா இருந்துச்சு. சேனல்ஸ்ல இது மாதிரி பங்கெடுத்துக்கிறதுல ரொம்பவே ஆவலா இருக்கேன்.''

தமிழில் பெரிய வெற்றிகள் கிடைக்காதது குறித்து வருத்தமா என்றால், ''எதுவும் என் கையில் இல்லையே. எனக்குக் கொடுத்த கேரக்டரை நல்லா பண்ணணும்னு நினைக்கறேன். கண்டிப்பா நான் ஒரே நாள்ல இந்த உயரத்தை அடையலை. படிப்படியாகத் தான் என் வளர்ச்சி இருந்திருக்கு. சிங்களத்துல எனக்கு உடனடி பலன் கிடைக்குதே'' என்று சமாதானம் அடைகிறார்.

**– சநகன்**



பார்த்திபன் கனவு

## பூர்வாசிரம கதை

**பா**ர்த்திப சோழ மகாராஜா, காஞ்சி நரசிம்ம சக்கரவர்த்திக்குக் கப்பம் செலுத்த மறுத்து, வெண்ணாற்றங்கரைப் போர்க்களத்தில் வீர சுவர்க்கம் அடைகிறார். ரணகளத்தில் அவருடைய உயிர் நீங்கப் போகும் தறுவாயில் தரிசனம் தந்த சிவனடியாரிடம் தம்முடைய மகன் விக்கிரமனை வீர புருஷனாக வளர்க்க வேண்டுமென்று வரம் வாங்கிக்கொண்டு உயிர்விடுகிறார்.

பார்த்திப சோழரின் பத்தினி அருள்மொழி ராணி, தன் மகன் விக்கிரமனுடன், உறையூருக்குக் கிழக்கே நதித் தீவில், வஸந்த மாளிகையில் வசித்து வந்தாள். அங்கு சிவனடியார் அடிக்கடி வந்து விக்கிரமனுக்கு வீர சுதந்திர உணர்ச்சியை ஊட்டி வருகிறார்.

விக்கிரமன் பதினெட்டாம் பிராயத்தைக் கடந்தபோது, சிராப்பள்ளி மலையில் புலிக் கொடியை உயர்த்தி சோழ நாட்டின் சுதந்திரத்தை ஸ்தாபிக்கத் தீர்மானிக்கிறான். பார்த்திப மகாராஜாவின் மாற்றாந்தாய் மகனான மாரப்ப பூபதி, பல்லவ சேனாதிபதியிடம் விக்கிரமனுடைய உத்தேசத்தை வெளிப்படுத்திவிடுகிறான். இதன் பயனாக, விக்கிரமனுடைய முயற்சி தோல்வியடைகிறது.

காஞ்சி நகரின் வீதியில் சங்கிலிகளால் பிணைப்புண்டு குதிரைமேல் சென்ற விக்கிரமனை, நரசிம்மவர்மரின் மகள் குந்தவிதேவி சந்திக்கிறாள். விக்கிரமனைத் தண்டனையிலிருந்து தப்புவிக்க அவள் செய்த முயற்சி பலிக்காமற் போகிறது. விக்கிரமன் தேசப் பிரஷ்ட தண்டனைக்கு உள்ளாகிறான்.

மாமல்லபுரத்துக் கடற்கரையில் விக்கிரமன் கப்பலில் ஏற்றப்படுகிறான். கப்பல் புறப்படும் சமயத்தில் கரையில் நின்ற சிவனடியார் தமது கரங்களைத் தூக்கி அவனை ஆசீர்வதிக்கிறார். இதைப் பார்த்த குந்தவிதேவி, இந்தச் சிவனடியார்தான் விக்கிரமனுடைய துரதிர்ஷ்டங்களுக்கெல்லாம் காரணம் என்று எண்ணி, அவர் யார் என்று கண்டுபிடிக்கத் தீர்மானிக்கிறாள்.

விக்கிரமனை ஏற்றிச் சென்ற கப்பல் செண்பகத் தீவின் அருகில் அவனை இறக்கிவிட்டுச் செல்கிறது. விக்கிரமன் செண்பகத் தீவின் பிரஜைகளால் அரசனாக முடிசூட்டப்படுகிறான்.

விக்கிரமனுக்கு வயது வந்த பின் கொடுக்க வேண்டுமென்று பார்த்திப மகாராஜா சொல்லியிருந்த சோழ வம்சத்து வீர வாளையும், திருக்குறளையும் உறையூர் அரண்மனையிலிருந்து கொண்டு வரும்படி படகோட்டி பொன்னனிடம் அருள்மொழி ராணி சொல்கிறாள். இந்த முயற்சியின்போது மாரப்பனிடம் அகப்பட்டுக்கொள்ள இருந்த படகோட்டி பொன்னனை சிவனடியார் தப்புவிக்கிறார்.

அருள்மொழி ராணி, தன்னைக் காண்பதற்கு வந்த சிறுத்தொண்டருடனும்

அவருடைய பத்தினியுடனும் ஸ்தல யாத்திரை செல்கிறாள்.

வீரவாளும், திருக்குறளும் அடங்கிய பெட்டி பட கோட்டியிடம் இருக்கிறது.

செண்பகத் தீவு அரசனாகிவிட்ட விக்கிரமனுக்கு, மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு, தாய்நாடு திரும்பும் எண்ணம் மேலோங்கவே, இரத்தின வியாபாரி தேவசேனனாக உருமாறி, கப்பலேறி வருகிறான்.

செண்பகத் தீவு போகுமுன் மாமல்லபுரக் கடற்கரையில் சந்தித்த, தன் மனம் கவர்ந்த மங்கையை மறுபடியும் இப்போது மாமல்லபுரத்து வீதியில் சந்திக்க நேர்கிறது. அவள், தான் இரத்தினம் வாங்கவிருப்பதாகவும் அதன் பொருட்டு அவன் அரண்மனைக்கு வரவேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறாள்.

அவள்தான் இளவரசி குந்தவி என்பதும், உறையூரில் தன் அன்னைக்கு ஏதோ ஆபத்து என்பதும் சேனாதிபதி மாரப்ப பூபதி பேச்சில் தெரியவர, விக்கிரமன் அதிர்ந்து உறையூர் விரைகிறான். அடர்ந்த காட்டு வழியில் நான்கு கள்வர்களால் சூழப்படுகிறான். அவர்களில் மூவரை சாமர்த்தியமாகக் கொன்று தீர்க்கிறான். எதிர்பாராவிதமான உதவிக்கு வருகிற ஒற்றர் தலைவன், மற்றவனைக் கொல்ல, விக்கிரமன், ஒற்றர் தலைவனுக்கு நன்றி கூறி, அவருடனே அந்த இரவை, பழைய ஆயனசிற்பி வீட்டில் கழிக்கிறான். ஒற்றர் தலைவன், ஆயனர் மகள் சிவகாமி பற்றியும், நரசிம்மவர்மருக்கு அவள் மேல் உண்டான காதல் பற்றியும், சிவகாமியின் சபதம் பற்றியும் சொல்ல, விக்கிரமன் நெகிழ்ந்து போகிறான்.

மறுநாள், ஒற்றர் தலைவனிடமிருந்து குதிரையைப் பெற்றுக்கொண்டு, விக்கிரமன் தன் உறையூர் பயணத்தைத் தொடர்கிறான்.

வழியில் ஒரு காட்டாற்றைக் கடக்க நேரிடுகையில், வெள்ளம் வந்துவிடுகிறது. தோதாகப் பெருமழை வேறு பிடிக்கிறது. விக்கிரமன் வெள்ளத்தில் சிக்குகிறான்...

இனி...



## 11.பழகிய குரல்

குதிரைமேலிருந்து வெள்ளத்தில் பாய்ந்த விக்கிரமன் சற்று நேரம் திக்குமுக்காடிப் போனான். படுவேகமாக உருண்டு புரண்டு அலை எறிந்து வந்த காட்டாற்று வெள்ளம் விக்கிரமனையும் உருட்டிப் புரட்டித் தள்ளியது. உறுதியுடன் பல்லைக் கடித்துக்கொண்டு விக்கிரமன் தன்னுடைய பூரண பலத்துடன் சமாளித்துத் தண்ணீர் மட்டத்துக்கு வந்தான். பின்னர், வெள்ளத்தின் போக்கை அனுசரித்து நீந்தத்

தொடங்கினான்.

கொஞ்சம் நிதானித்துச் சுற்றுமுற்றும் பார்த்தபோது இரு கரையும் ஏறக்குறைய சமதூரத்தில் இருப்பதாகத் தோன்றியது. எனவே, வந்த வழி திரும்புவதைக் காட்டிலும் அக்கரைக்குப் போய்விடுவதே நல்லது என்று தீர்மானித்துக்கொண்டு எதிர்ப்புறம் நோக்கிச் சென்றான். ஆற்றின் நேர்குறுக்கே அந்த வேகமான வெள்ளத்தில் நீந்துவதென்பது இயலாத காரியமாதலால், அக்கரையில் கொஞ்ச தூரத்தில் கீழ்த்திசையிலே காணப்பட்ட ஒரு அரச மரத்தைக் குறிவைத்துக்கொண்டு நீந்தத் தொடங்கினான்.

சட்டென்று குதிரையின் ஞாபகம் வந்தது. 'ஐயோ! அது வெள்ளத்தில் போயிருக்குமே?' என்ற எண்ணத்தினால் அவன் திடுக்கிட்டான். திரும்பிப் பார்த்தபோது, வெகு தூரத்தில் தான் ஆற்றில் இறங்கிய இடத்துக்கருகில் குதிரை வெள்ளத்துடன் போராடிக் கொண்டிருப்பதைப் பார்த்தான்.

'நல்ல வேளை! குதிரையாவது பிழைத்ததே!' என்று அவனுக்குச் சிறிது ஆறுதல் உண்டாயிற்று. ஏனெனில், தான் தப்பிக் கரையேறலாம் என்ற ஆசை அவனுக்கு வரவரக் குறைந்து வந்தது. அக்கரையை நெருங்க நெருங்க, வெள்ளத்தின் வேகம் அபரிமிதமாயிற்று. யானைகளையும் குன்றுகளையும் கூடப் புரட்டித் தள்ளிவிடக்கூடிய வேகத்துடனும் 'ஓ'வென்ற இரைச்சலுடனும் அந்த வெள்ளம் அலைமோதிக் கொண்டு வந்தது. விக்கிரமனுடைய கைகள் களைப்படையத் தொடங்கின. நீந்திக் கரை ஏறுவது அசாத்தியம் என்றே விக்கிரமன் முடிவு செய்துவிட்டான். 'ஆகா! விதியின் விசித்திரத்தை என்னவென்று சொல்வது; என்னவெல்லாம் பகற் கனவு கண்டோம்! ஆகாசக் கோட்டைகள் கட்டினோம்? எல்லாம் இப்படியா முடிய வேணும்! தந்தை பார்த்திப மகாராஜா கண்ட கனவைப் போலவே தன்னுடைய கனவும் முடிந்துவிட்டதே! அவராவது போர்க்களத்தில் வீர மரணம் அடைந்தார். தான் ஆற்று வெள்ளத்தில் அகால மரணமல்லவா அடைய வேண்டியிருக்கிறது! இதற்காகவா இவ்வளவு அவசரமாகத் தாய்நாட்டுக்குத் திரும்பி வந்தோம்? ஐயோ? அம்மாவைப் பார்க்காமலேயல்லவா போகிறோம்! ஒரு தடவையாவது அவளைப் பார்த்து, 'அம்மா! தகப்பனாருக்கு நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றிவிட்டேன். கடல்களுக்கு அப்பாலுள்ள தேசத்தில் சுதந்திர இராஜ்யத்தை ஸ்தாபித்திருக்கிறேன்' என்று சொல்லக் கொடுத்து வைக்கவில்லையே! அவ்விதம் சொன்ன பிறகு இத்தகைய மரணம் சம்பவித்திருந்தால்கூடப் பாதகமில்லை - ஆகா! திரும்புங்காலையில் மாமல்லபுரத்தின் அந்தத் தாமரைக் கண்ணாளைக் கண்டுபிடித்து, அவள் யாராயிருந்தாலும் சரிதான், 'என்னுடன் நீயும் தேசப் பிரஷ்டையாகி வரச் சம்மதமா!' என்று கேட்க எண்ணியிருந்தோமே? அவள் ஒரு வேளை நம்மை எதிர்பார்த்துக்கொண்டிருப்பாளோ? அப்படியானால், எத்தகைய ஏமாற்றம் அடைவாள்? ஆகா, கம்பீரத் தோற்றமுள்ள அந்த ஒற்றர் தலைவனை மறுபடியும் பார்த்து, அவனிடம் குதி

**விக்கிரமனுடைய கைகள் அடியோடு களைத்துவிட்டன. அவனுடைய உடம்பு இரும்பினால் ஆனது போல் கனத்தது. முடியாது, இனி ஒரு கணமும் முடியாது...**

ரையை ஒப்புவிக்காமல் அல்லவா போகிறோம்?'

விக்கிரமனுடைய கைகள் அடியோடு களைத்துவிட்டன. அவனுடைய உடம்பு இரும்பினால் ஆனது போல் கனத்தது. முடியாது, இனி ஒரு கணமும் முடியாது... அதோ வெள்ளத்தில் உருண்டு புரண்டு கறுப்பாய் வருகிறதே, அது என்ன? பெரிய மரம் ஒன்றை வெள்ளம் அடித்துக் கொண்டு வருகிறது. 'நல்ல வேளை! அதைப் பிடித்துக்கொள்ளலாம்... ஐயோ! மரம் அதோ போய்விட்டதே!' இனிமேல் நம்பிக்கைக்குச் சிறிதும் இடமில்லை... விக்கிரமனுடைய கண்கள் இருண்டன; மதி மயங்கிற்று. அந்தச் சமயத்தில் அவனுக்குத் திடீரென்று படகோட்டி பொன்னனுடைய நினைவு வந்தது! இளம் பிராயத்தில் காவேரியில் நீந்தக் கற்றுக் கொள்ளும்போது, சில சமயம் இம்மாதிரி களைப்படைந்து முழுகும் தருவாய்க்கு வந்துவிடுவதுண்டு. அப்போதெல்லாம் பொன்னன் அவனைத் தூக்கி எடுத்துக் காப்பாற்றியிருக்கிறான். அம்மாதிரி 'இச்சமயமும் பொன்னன் வரமாட்டானா...? இது என்ன பைத்தியக்கார எண்ணம்...? அதோ கரையில் ஒரு மனித உருவம் தெரிகிறது. அது யார்? ஒருவேளை பொன்னன் தானோ...? இது என்ன வீண் பிரமை...? அம்மா! அம்மா...!' விக்கிரமனை ஒரு பெரிய அலை மோதிற்று; அவன் நீரில் அமிழ்ந்து நினைவிழந்தான்.

**வி**க்கிரமனுக்குக் கொஞ்சம் கொஞ்சமாகப் பிரக்ஞை வந்து கொண்டிருந்தது. எங்கேயோ வெகு தூரத்திலிருந்து, பாதாள உலகத்திலிருந்து வருவதுபோல், ''மகாராஜா'' என்ற மெல்லிய குரல் கேட்டது. 'இது யாருடைய குரல்? கேட்டுப் பழகிய குரல் மாதிரி இருக்கிறதே!' - ஆம், படகோட்டி பொன்னனுடைய குரல்தான். இது உண்மையாக நடப்பதுதானா? கனவில்லையா! பிரமையில்லையா! கடைசியாக, காட்டாற்று வெள்ளத்தில் தான் இறங்கியதும், நீந்திக் கை களைத்து நீரில் மூழ்கியதும் விக்கிரமனுக்கு நினைவு வந்தன. ஒரு வேளை இது மரணத்துக்குப் பிறகு மறு உலகத்தில் கேட்கும் குரலோ? இதுவரையில் விக்கிரமனுடைய கண்கள் மூடியிருந்தன. இப்போது ஒரு பெரும் பிரயத்தனம் செய்து பார்த்தான். ஆமாம்; படகோட்டி பொன்னனுடைய முகந்தான் அது! மழையில் நனைந்து வெள்ளத்தில் முழுகி





எழுந்திருந்த பொன்னனுடைய தேகம் முழுதும் தண்ணீர் சொட்டிக் கொண்டிருந்தது. போதாததற்கு அவனுடைய கண்களிலிருந்து நீர் பெருகி வழிந்து கொண்டிருந்தது.

''பொன்னா! நீதானா? இதெல்லாம் நிஜமா அல்லது கனவா?'' என்றான் விக்கிரமன்.

''மகாராஜா, நானும் அதையேதான் கேட்க இருந்தேன், நிஜமாக நீங்கள் தானா அல்லது இது கனவா? பிரமையா? நிஜமாக விக்கிரம மகாராஜாவையா நான் வெள்ளத்திலிருந்து கரையேற்றினேன். உயிர் பிழைத்துக் கண் விழித்து என்னுடன் பேசுவது நீங்கள்தானா? ஒன்றுமே நம்ப முடியவில்லையே! - ஆகா! வள்ளி மட்டும் இங்கே இச்சமயம் இருந்தாளானால்...''

ஆற்றங்கரை அரச மரத்தடியில் ஒரு பெரிய வேரின் மேல் பொன்னன் உட்கார்ந்திருந்தான். அவனுடைய மடியின் மீது விக்கிரமனுடைய தலை இருந்தது. மழை நின்று சிறு தூறல் போட்டுக் கொண்டிருந்தது. குளிர்ந்த வாடை வீசிற்று. இரவு சமீபித்துக் கொண்டிருந்தபடியால் நாலாபுறமும் இருள் அடர்ந்து வந்தது.

விக்கிரமன் சட்டென்று எழுந்து உட்கார்ந்தான்.

''பொன்னா! நான்தான்; விக்கிரமன்தான். ஒரு அதிசயத்தைக் கேள். வெள்ளத்தில் முழுகும்போது நான் என்ன நினைத்துக்கொண்டேன் தெரியுமா? கடைசியாக, உன்னைத்தான் நினைத்துக்கொண்டேன். காவேரி நதியில் நான் நீந்தக் கற்றுக் கொண்டபோது, என் கை சளைத்துத் தண்ணீரில் முழுகப் போகும் தருணத்தில் எத்தனை தடவை நீ என்னை



எடுத்துப் படகில் ஏற்றி விட்டிருக்கிறாய்? அது எனக்கு நினைவு வந்தது. இந்தச் சமயத்திலும் நீ வரக்கூடாதா என்று நினைத்தேன். கரையிலே ஒரு மனித உருவத்தைப் பார்த்தேன். ஒருவேளை நீதானோ என்றும் எண்ணினேன். இருக்காது - இது பிரமை என்று எண்ணிக் கொண்டே தண்ணீரில் மூழ்கினேன். நிஜமாக நீயாகவே இருந்துவிட்டாயே! என்ன அற்புதம்! அவ்வளவு சரியான சமயத்தில் நீ எப்படி இங்கு வந்து சேர்ந்தாய்?'' என்றான்.

''எனக்கும் அப்படித்தான் ஆச்சரியமாயிருக்கிறது, மகாராஜா...! அதோ பாருங்கள், அந்த மண்டபத்தை'' என்று பொன்னன் சுட்டிக் காட்டினான். சற்று தூரத்தில் ஒரு சிறு மண்டபம் காணப்பட்டது.

''பெருமழை பிடித்துக்கொண்டபோது, நான் அந்த மண்டபத்தில் ஒதுங்கியிருந்தேன். ஆற்றில் வெள்ளம் பிரமாதமாய்ப் பெருகும் காட்சியைப் பார்த்துக்கொண்டு நின்றேன். அப்போது அக்கரையில் குதிரைமேல் யாரோ வருவது தெரிந்தது. ஆற்றில் இப்போது இறங்கினால் ஆபத்தாயிற்றே என்று நான் எண்ணிக் கொண்டிருக்கும்போதே நீங்கள் மளமளவென்று இறங்கிவிட்டீர்கள். ஆனால், அப்போது நீங்கள் என்று எனக்குத் தெரியாது. குதிரை மேலிருந்து வெள்ளத்தில் குதிப்பதையும், நீந்தி இக்கரைக்கு வர முயற்சிப்பதையும் பார்த்து இவ்விடத்துக்கு வந்தேன். நீங்கள் கை சளைத்து முழுகுவதைப் பார்த்துவிட்டுத் தண்ணீரில் குதித்தேன். மகாராஜா! அந்தச் சமயம் - சொல்ல வெட்கமாயிருக்கிறது - 'இந்தப் பெரும் வெள்ளத்தில் நாமும் போய்விட்டால் என்ன செய்கிறது?' என்று கொஞ்சம் யோசனை உண்டாயிற்று. நல்ல வேளையாக அந்த யோசனையை உதறித் தள்ளிவிட்டுக் குதித்தேன். அப்படிக் குதிக்காமலிருந்திருந்தால், ஐயோ!'' என்று பொன்னன் கண்களை மூடிக்கொண்டான். அவன் உடம்பு வெடவெடவென்று நடுங்கிற்று.

''பொன்னா! அதை ஏன் இப்போது நினைக்கிறாய்? நமது குலதெய்வமான முருகக் கடவுள்தான் அந்தச் சமயத்தில் உனக்கு அவ்வளவு துணிச்சலைக் கொடுத்தார்... இல்லை! இல்லை! காலஞ்சென்ற பார்த்திப மகாராஜாதான் தோன்றாத் துணையாயிருந்து ஆபத்து வரும் சமயங்களிலெல்லாம் என்னைக் காப்பாற்றி வருகிறார்! இருக்கட்டும், பொன்னா! என்னவெல்லாமோ பேசிக்கொண்டிருக்கிறேன்! மகாராணி சௌக்கியமா?'' என்று ஆவலுடன் கேட்டான் விக்கிரமன்.

மகாராணி என்றதும் பொன்னன் திடீரென்று கண்ணைக் கைகளால் பொத்திக் கொண்டு விம்மத் தொடங்கினான். இதைப் பார்த்ததும் விக்கிரமனுக்கு ஏற்பட்ட நெஞ்சத் துடிப்பை விவரிப்பது இயலாத காரியம்.

''ஐயோ! பொன்னா! என்ன விபத்து நேர்ந்துவிட்டது? மகாராணி இறந்துவிட்டாரா?'' என்று பதைபதைப்புடன் கேட்டான்.

**"ஐயோ! பொன்னா! என்ன விபத்து நேர்ந்துவிட்டது? மகாராணி இறந்துவிட்டாரா?" என்று பதைபதைப்புடன் கேட்டான் விக்கிரமன்.**

அப்போது பொன்னன், ''இல்லை மகாராஜா இல்லை. மகாராணி எங்கேயோ உயிரோடுதான் இருக்கிறார். ஆனால், எங்கே என்றுதான் தெரியவில்லை...'' என்றான்.

விக்கிரமனுக்குக் கொஞ்சம் உயிர் வந்தது!

''அதெப்படி பொன்னா! உன்னிடந் தானே நான் மகாராணியை ஒப்புவித்து விட்டுப் போனேன்? நீ எப்படி அஜாக்கிரதையாயிருந்தாய்...?''

''மகாராஜா! எல்லாம் விவரமாய்ச் சொல்ல வேண்டும். மறுபடியும் மழை வலுக்கும்போலிருக்கிறது. தாங்கள் ஏற்கெனவே நனைந்திருக்கிறீர்கள். குளிர் காற்றும் அடிக்கிறது! அதோ அந்த மண்டபத்துக்குப் போகலாம் வாருங்கள். எவ்வளவோ சொல்ல வேண்டும்; எவ்வளவோ கேட்க வேண்டும். இரவும் நெருங்கிவிட்டது.''

இருவரும் எழுந்திருந்து மண்டபத்தை நோக்கிப் போனார்கள்.

## 12.சூரிய கிரஹணம்

**வி**க்கிரமனும் பொன்னனும் மண்டபத்தை அடைந்தபோது நன்றாக இருட்டிவிட்டது. இம்மாதிரி ஜன சஞ்சாரமில்லாத இடங்களில் வழிப்போக்கர்கள் தங்குவதற்காக அத்தகைய மண்டபங்களை அந்நாளில் கட்டியிருந்தார்கள். மகேந்திர சக்கரவர்த்தியின் காலத்தில் அவருடைய கட்டளையினால் கட்டப்பட்டபடியால் அவற்றுக்கு மகேந்திர மண்டபங்கள் என்ற பெயர் வழங்கி வந்தது.

மண்டபத்துக்கு வெளிப்புறம் இருந்த திண்ணையில் விக்கிரமனை இருக்கச் செய்து, பொன்னன் உள்ளே சென்று தான் அங்கு வைத்திருந்த உலர்ந்த துணிகளை எடுத்து வந்தான். விக்கிரமன் அவற்றை உடுத்திக்கொண்டான். அந்த மழைக்கால இருட்டில் இனி வழி நடப்பது அசாத்தியமாதலால், அன்றிரவை அந்த மண்டபத்திலேயே கழிப்பது என்று இருவரும் சேர்ந்து தீர்மானித்தார்கள்.

பிறகு, பொன்னன் அருள்மொழி ராணியைப் பற்றிய பின்வரும் அதிசயமான வரலாற்றைக் கூறினான்:-



**வி**க்கிரமன் தேசப் பிரஷ்ட தண்டனைக்கு உள்ளாகிக் கப்பல் ஏறிச் சென்ற பிறகு, அருள்மொழி ராணிக்கு உயிர் வாழ்க்கை பெரும் பாரமாயிருந்தது. மீண்டும் தன் புதல்வனை ஒருமுறை காணலாம் என்ற ஆசையினாலும் நம்பிக்கையினாலுமே உயிரைச் சுமந்து கொண்டிருந்தாள். ஆனாலும், முன்னர் கணவனுடனும் பிறகு புதல்வனுடனும் வசித்திருந்த வசந்த மாளிகையில் தன்னந் தனியாக வசிப்பது அவளுக்கு நரக வேதனையாயிருந்தது. இச்சமயத்தில்தான், பார்த்திப மகாராஜாவின் தோழரும் பழைய பல்லவ சேனாதிபதியுமான பரஞ்சோதி அடிகள் தமது தர்மபத்தினியுடன் தீர்த்த யாத்திரை செய்துகொண்டு உறையூருக்கு வந்தார். அவர்கள் வசந்த மாளிகைக்கு வந்து அருள்மொழி ராணியைப் பார்த்துத் தேறுதல் கூறினார்கள். அருள்மொழி, அவர்களுடன் தானும் ஸ்தல யாத்திரை வருவதாகச் சொல்லவே, அவளையும் அழைத்துக்கொண்டு பிரயாணம் கிளம்பினார்கள்.



காஞ்சி நகர் ஒன்று நீங்கலாக தமிழகத்திலுள்ள மற்ற புண்ணிய ஸ்தலங்களுக்கெல்லாம் அவர்கள் சென்றார்கள். இரண்டு வருஷகாலம் இவ்விதம் யாத்திரை செய்த பிறகு, சென்ற வருஷம் தை மாதத்து அமாவாசையில் காவேரி சங்கமத்தில் ஸ்நானம் செய்யும் பொருட்டு, அவர்கள் பரஞ்சோதி அடிகளின் சொந்த ஊராகிய திருச்செங்காட்டாங்குடிக்கு வந்து சேர்ந்தார்கள்.

சென்ற வருஷம் தை அமாவாசையில் மகோதய புண்ணிய காலம் சேர்ந்தது. அதனுடன் அன்று சூரிய கிரகணம் - சம்பூர்ண கிரகணம் - பிடிப்பதாயுமிருந்தது. இந்த விசேஷ புண்ணிய தினத்தை முன்னிட்டு, அன்று காவேரி சங்கமத்தில் சமுத்திர ஸ்நானம் செய்வதற்காக நாடெங்கும் இருந்து ஜனங்கள் திரள் திரளாக வந்தார்கள். பொன்னனும் வள்ளியுங்கூட உறையூரிலிருந்து நெடுநாள் பிரயாணம் செய்து காவேரி சங்கமத்துக்கு வந்து சேர்ந்தனர். உறையூர் வாழ்க்கை அவர்களுக்கும் பிடிக்காமற் போயிருந்தபடியாலும், அருள்மொழி ராணியை ஒருவேளை சந்திக்கலாம் என்ற ஆசையினாலுந்தான் அவர்கள் வந்தார்கள். அவர்களுடைய ஆசையும் நிறைவேறியது. திருச்செங்காட்டாங்குடியிலேயே அருள்மொழித் தேவியை அவர்கள் சந்தித்துக்கொண்டார்கள்.

புண்ணிய தினத்தன்று காலையில் பரஞ்சோதி அடிகள், அவர்களுடைய பத்தினி திருவெண்காட்டு நங்கை, அருள்மொழி ராணி, பொன்னன், வள்ளி எல்லோருமாக காவேரி சங்கமத்துக்குக் கிளம்பினார்கள். சங்கமத்தில் அன்று கற்பனைக்கடங்காத ஜனத்திரள் கூடியிருந்தது. உலகத்திலுள்ள மக்கள் எல்லாம் திரண்டு வந்துவிட்டார்களோ என்று தோன்றிற்று. ஜன சமுத்திரத்தைக் கண்ட உற்சாகத்தினால் ஜல சமுத்திரமும் பொங்கிக் கொந்தளித்துக் கொண்டிருந்தது.

**பொன்னனும், வள்ளியும் 'ஓ'வென்று கதறினார்கள். தியானத்திலிருந்து கண் விழித்த பரஞ்சோதி அடிகள், "என்ன? என்ன?" என்றார்.**

சமுத்திரம் பொங்கி காவிரிப்பூம் பட்டினத்தைக் கொள்ளைகொண்ட காலத்துக்குப் பிறகு, காவேரி நதியானது மணலைக் கொண்டு வந்து தள்ளித் தள்ளிச் சமுத்திரத்தை அங்கே வெகு தூரத்துக்கு ஆழமில்லாமல் செய்திருந்தது. இதனால் சமுத்திரத்தில் வெகு தூரம் விஸ்தாரமாக ஜனங்கள் பரவி நின்று ஸ்நானம் செய்து கொண்டிருந்தார்கள். அலைகள் வரும்போது ஜலத்தில் முழுகியும், அலைகள் தாண்டியவுடன் மேலே கிளம்பியும், இவ்வாறு அநேகர் சமுத்திர ஸ்நானத்தின் குதூகலத்தை அனுபவித்துக் கொண்டே புண்ணியமும் சம்பாதித்துக் கொண்டிருந்தார்கள்.

இப்படிப்பட்ட ஜனக் கூட்டத்தின் மத்தியில் பரஞ்சோதி அடிகள், அருள்மொழி ராணி ஆகியவர்களும் ஸ்நானம் செய்வதற்காகச் சமுத்திரத்தில் இறங்கிச் சென்றார்கள்.

இப்போது சூரிய கிரகணம் பிடிக்க ஆரம்பித்துவிட்டது. அதிக வேகமாக சூரியனுடைய ஒளி குறைந்துகொண்டு வந்தது. கிரகணம் முற்ற முற்ற வெளிச்சம்

குன்றி வந்ததுடன், சமுத்திரத்தின் கொந்தளிப்பும் கோஷமும் அதிகமாகி வந்தன.

பட்டப் பகலில், மேகமில்லாத துல்லிய ஆகாயத்தில் திடீரென்று சூரிய ஒளி குன்றி இருள் சூழ்ந்து வந்த காட்சியினால், சகலமான ஜனங்களுக்கும் மனத்தில் இன்னதென்று சொல்ல முடியாத ஒருவித அச்சம் உண்டாயிற்று. அப்போது இயற்கையிலேயே தெய்வ பக்தியுள்ளவர்கள் அண்ட சராசரங்களையெல்லாம் படைத்துக் காத்து அழிக்கும் இறைவனுடைய லீலா விபூதிகளை எண்ணிப் பரவசம் அடைந்தார்கள். பரஞ்சோதி அடிகள் அத்தகைய நிலையைத்தான் அடைந்திருந்தார். ராணி அருள்மொழி தேவியும் கண்களை மூடிக்கொண்டு கிழக்குத் திசையை நோக்கித் தியானத்தில் ஆழ்ந்திருந்தாள்.



வள்ளி சமுத்திரத்தையே அன்று வரையில் பார்த்தவள் இல்லை. ஆகையால் அவள் நெஞ்சு திக்திக்கென்று அடித்துக்கொண்டிருந்தது. அவளை அலை அடித்துக் கொண்டு போகாவண்ணம் பொன்னன் அவளுடைய கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டிருந்தான். வள்ளி பொன்னனிடம், ''எனக்குப் பயமாயிருக்கிறதே! கரைக்குப் போகலாமே!'' என்றாள். ''இவ்வளவுதானா உன் தைரியம்?'' என்று பொன்னன் அவளிடம் சொல்லிக் கொண்டிருக்கும்போது, திடீரென்று அந்த அதிசயமான துயரச் சம்பவம் - யாரும் எதிர்பாராத காரியம் - நடந்துவிட்டது.

ராணி அருள்மொழி மூடியிருந்த கண்களைத் திறந்தாள். ''குழந்தாய், விக்கிரமா! இதோ வந்துவிட்டேன்!'' என்று கூவினாள். ராணியின் அந்த அலறும் குரல் ஒலி, அலைகளின் பேரிரைச்சலையெல்லாம் அடக்கிக்கொண்டு மேலெழுந்து பொன்னன், வள்ளி இவர்கள் செவியில் விழுந்தது. இந்த அலறல் ஒலி கேட்டது ஒரு கணம்; மறுகணத்தில் அருள்மொழி ராணி கிழக்கு நோக்கிக் கடலிலே பாய்ந்தாள். ஒரு பேரலை வந்து மோதி அவளை மூழ்கடித்தது.

பொன்னனும், வள்ளியும் 'ஓ'வென்று கதறினார்கள். தியானத்திலிருந்து கண் விழித்த பரஞ்சோதி அடிகள், ''என்ன? என்ன?'' என்றார். பொன்னன், ''ஐயோ! மகாராணி அலையில் போய்விட்டாரே!'' என்று அலறினான். உடனே, பரஞ்சோதி அடிகள் தமது பத்தினியையும் வள்ளியையும் நோக்கி, ''நீங்கள் உடனே கரை ஏறி விடுங்கள்!'' என்றார்.

அச்சமயத்தில் சூரிய கிரகணம் சம்பூரணம் ஆயிற்று. வானத்தில் நட்சத்திரங்கள் தெரிந்தன.

இருட்டினால் கலவரமடைந்த ஜனங்களின் மத்தியில் ''அப்பா!'', ''அம்மா!'', ''மகனே!'' என்ற கூக்குரல்கள் கிளம்பின, பக்தர்களுடைய பரவசக் குரலில், ''ஹர ஹர'', ''சம்போ'' என்னும் கோஷங்களும் எழுந்தன.

அந்தக் கிரகண அந்தகாரத்தில் கடல் அலைகளுடன் போராடிக்கொண்டு பரஞ்சோதி அடிகளும் பொன்னனும் அருள்மொழி ராணியைத் தேடத் தொடங்கினார்கள்.

(தொடரும்)





# புத்தாண்டு

தஞ்சை பரத்வாஜ்

சென்ற இதழ் தொடர்ச்சி...

## சிம்மம்

இந்த வருடத்தின் ஆரம்பத்திலேயே, எதிர்பார்க்கும் காரியம் நிறைவேறும். மனக் குழப்பங்கள் தீரும். திருமணக் காரியம் கைகூடும். வீடு, மனை வாங்கும் யோகம் கிட்டும். கணவன், மனைவிக்குள் இருந்து வந்த மனக் கசப்பு நீங்கி, ஒற்றுமையுடன் சேர்ந்து வாழ்வார்கள். குழந்தைகளின் கல்வி வளம் மேலோங்கும். பொருளாதாரக் கஷ்டம் விலகி, பண வருவாய் அதிகரிக்கும். வாக்கு வன்மை, கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். வராத நிலுவைகள் வசூலாகும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். அரசியல் வாழ்வில் உள்ளவர்களுக்குத் திரும்பப் பதவி, பட்டம் வந்து சேரும். மறைமுக எதிர்ப்புத் தொல்லைகள் விலகும். உத்தியோகத்தில் விரும்பிய மாறுதல் கிட்டும். ஊதிய உயர்வு கிட்டும். ஆஞ்சநேயர் சுவாமியை சனிக் கிழமைதோறும் வழிபட்டு வருவதால் நற்பலன் உண்டாகும். ராகு/கேதுவுக்கு விளக்கேற்றி வழிபாடு செய்வது நற்பலனை அளிக்கும்.

## கன்னி

நன்மை, தீமை கலந்த ஆண்டாக இருக்கும். சிலருக்குத் தொழில் துறையில் இடமாற்றம் ஏற்படும். புதிய வேலைவாய்ப்பு கிட்டும். கொடுக்கல், வாங்கல் சற்று மந்தமாக இருக்கும். இருந்தாலும், பணக் கஷ்டம் இருக்காது. இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். தடைபட்டு வந்த திருமணக் காரியம் கைகூடும். கல்வியில் நல்ல மதிப்பெண் கிட்டும். மேற்கல்வி நன்றாக வரும். உத்தியோகத்தில் பதவி உயர்வு ஏற்படும். நாணயம் காப்பாற்றப்படும். கணவன், மனைவிக்குள் அனுசரணை இருக்கும். சமூக சேவகர்களுக்கு நல்ல பெயர் ஏற்படும். குடும்பப் பெண்களுக்குப் பொறுப்புகள் அதிகம் ஏற்படும். வயதான பெண்மணிகளுக்கு உடல்நலம் பாதிக்கும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். செய்தொழிலில் சற்று ஏற்றத் தாழ்வு இருக்கும். அரசியல் சார்ந்தவர்களுக்குப் பிற்போக்கான சூழ்நிலை இருக்கும். அச்சுத்துறை, எழுத்துத் துறையில் உள்ளவர்கள் நல்ல செல்வாக்கு பெறுவார்கள். குழந்தைகள் வழியில் சுபநிகழ்ச்சி ஏற்படும். வியாழக்கிழமை தோறும் குருவுக்கு விளக்கேற்றி, வழிபாடு செய்து வரவும்.

## துலாம்

மகிழ்ச்சிகரமான ஆண்டாக இருக்கும். புதிய திட்டங்கள் கைகூடும். நெருங்கியவர்களை விட்டு தொலை தூரம் போகும் சூழ்நிலை உருவாகும். பூர்வீகச் சொத்துகள் பாகப்பிரிவினை ஆகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். குழந்தைகள் வழியில் சுப நிகழ்ச்சி நடக்கும். நீண்ட காலம் முடிவு பெறாத வழக்குகள் வெற்றி அளிக்கும். பணக் கஷ்டம் விலகும். உடன் பிறந்தவர்களால் அனுகூலம் ஏற்படும். கடன் சுமை தீரும். வீடு வாங்கும் யோகம் வந்து சேரும். கொடுக்கல், வாங்கல் நற்பலனை அளிக்கும். மனச் சலனம் விலகும். கூட்டாளிகளை விட்டு விலக நேரிடும். புதிய வேலைவாய்ப்பு கிட்டும். திருமணக் காரியம் கைகூடும். வாக்கு வன்மை, நாணயம் காப்பாற்றப்படும். அரசியல் சார்ந்தவர்களுக்குப் பதவி, பட்டம் தேடி வரும். ஏற்றுமதி, இறக்குமதித் தொழில் செய்பவர்களுக்கு முன்னேற்றம் உண்டாகும். புண்ணியஸ்தலம் செல்லும் வாய்ப்பு வந்து சேரும். மகான்கள் தரிசனம் கிட்டும். தெய்வ பிரார்த்தனைகள் நிறைவேறும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். ராகு / கேதுவுக்கு அந்தந்த கிழமைகளில் பூ வைத்து வழிபாடு செய்து வர நன்மை உண்டாகும்.

## விருச்சிகம்

நினைத்த காரியத்தில் அசாத்திய வெற்றி அளிக்கும். பணப் பற்றாக்குறை இருக்காது. திருமணக் காரியம் நிறைவேறும். வாக்கு வன்மை மேலோங்கும். நீண்ட காலக் கடன் தொல்லை நீங்கும். வராத நிலுவைகள் வந்து சேரும். ஆடை ஆபரண, அலங்காரப் பொருட்கள் சேரும். பொருளாதார முன்னேற்றம் ஏற்படும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். சொசைட்டியில் நல்ல மதிப்பும், மரியாதையும் கிட்டும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். வேலைப்பளு அதிகரிக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கலைத் துறையைச் சார்ந்தவர்கள் ஏற்றம் பெறுவார்கள். அச்சுத்துறை, எழுத்துத் துறையில் உள்ளவர்களுக்கு நற்பெயர் ஏற்படும். ஏற்றுமதி, இறக்குமதித் தொழில் செய்பவர்கள் நல்ல வருவாயை அடைய நேரிடும். அரசியல்வாதிகள் எதிலும் வெற்றிவாகை சூடுவார்கள். விவசாயத் தொழில் செய்பவர்களுக்கு, ஏப்ரலுக்குப் பிறகு நல்ல ஆதாயம் கிட்டும். சிலருக்கு மகப்பேறு பாக்கியம் உண்டாகும். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். மகான்கள் தரிசனம் கிட்டும். ராகு / கேதுவுக்கு அந்தந்த கிழமைகளில் வழிபாடு செய்து வர சஞ்சலம் தீரும்.

(மற்ற ராசிகள் அடுத்த வாரம்)

# பலன்கள் - 2008





# மாறாத அன்பு!

அன்பு செய்தாலும், முடிவில் துன்பம்; அன்பு இல்லாமல் இருந்தாலோ, வாழ்க்கையில் ருசியே இல்லை. இப்படியானால், என்ன செய்வது? மாறாத, மாளாத அன்பை உண்டாக்கிக் கொள்வதே வழி. நம்முடைய அன்புக்குரிய வஸ்து, நம்மைவிட்டு என்றும் பிரிந்து போகாததாக இருக்க வேண்டும். அப்படி ஒரு வஸ்து இருந்து, அதனிடம் அன்பை வைத்துவிட்டால், நாமும் அதுவும் ஒரு நாளும் பிரியப்போவதில்லை. எப்போதும் ஆனந்தமாக, நிறைவாக இருக்கலாம்.

அதாவது, என்றும் மாறாமல் இருக்கிற ஒரே வஸ்துவான பரமாத்மாவிடம், அன்பைப் பூரணமாக வைத்துவிட வேண்டும். பரமாத்மா நம்மைவிட்டு ஒரு போதும் நீங்குவதில்லை. நம் சரீரத்திலிருந்து உயிர் பிரிந்தாலும், பிரிகிற உயிர் பரமாத்மாவிடமிருந்து பிரியாமல் அவரிடமே கலந்துவிடும். அவரிடம் வைக்கிற அன்பே சாசுவதமாக இருக்க முடியும்.

அழியாத பரமாத்மாவிடம் அன்பாக இருக்க வேண்டும் என்றால், வேறு யாரிடமும் அன்பாக இருக்கக் கூடாதா, மற்ற எல்லோரும் என்றோ ஒரு நாள் நசிப்பவர்கள் தானே என்று கேள்வி எழலாம். பரமாத்மாவிடம் அன்பை நாம் மேலும் மேலும் வளர்த்துக்கொண்டால், அவருக்கு வேறாக யாருமே இல்லை என்று தெரியும். மரணமடைகிற மனிதர்களாக எண்ணி அதுவரை யாரிடமெல்லாம் துக்க ஹேதுவான அன்பை வைத்திருந்தோமோ, அவர்களும்கூட இப்போது அழியாத பரமாத்ம ஸ்வரூபமாகவே தெரிவார்கள். இப்படி உலகம் முழுவதையும் பரமாத்மாவாகவே பார்த்து அன்பு செலுத்த வேண்டும். அப்போது நம் அன்பு ஒரு நாளும் துக்கத்துக்கு மூலமாக ஆகாமலே இருக்கும்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்




# இரண்டு பொக்கிஷங்கள்!

ராமநாதபுரம் (ராம்நாட்) கிருஷ்ணன் என்கிற அபூர்வமான இசைக் கலைஞரை, ஒரு டி.வி.டி.யில் உயிர்த் துடிப்போடு கொண்டு வந்திருக்கிறார் இயக்குனர் எஸ்.பி.காந்தன்.

கிட்டத்தட்ட அவரைப் போலவே உருவமுள்ள ஒருவரை 'ஸிலுட்' எனும் நிழல் வடிவில் திரைக்குக் கொண்டுவந்து, பாட்டுகளுக்கு ஏற்ப கை, வாய் அசைவுகளை சின்க்ரனைஸ் செய்திருப்பது புது முயற்சி. திரையில் மலையும், தோட்டமும், ஓங்கிப் பாய்ந்து ஒதுங்கும் கடல் அலையும், விழும் அருவியும், நெடிதான கோபுரமும், நடனமிடும் மயிலுமாக, இசைக்கும் இயற்கைக்கும் ஒரு தொடர்பை உருவாக்கியிருப்பது விஷுவல் மீடியாவுக்குத் தேவையான உத்தி என்றாலும், அவற்றைப் பொருத்தமாக ஆலாபனைகளுக்கும், பாடல்களுக்கும், ஜாவளிக்கும் பயன்படுத்தியிருப்பது பாராட்ட வேண்டிய முயற்சி.


* எஸ்.பி.காந்தன்

சங்கராபரணமும், சஹானாவும், அடாணாவும், மத்தியமாவதியும் கிருஷ்ணன் பாடும்போது மட்டும் எப்படி இத்தனை அழகு பெறுகின்றன என்பதை, நறுக்குத் தெறித்தாற்போல் இடையிடையே இசைக் கலைஞர்கள் வழங்கும் பாராட்டு வரிகள் புரிய வைக்கின்றன.


* ம.செ.

'கற்பகமே கண்பாராய்' என்ற பாடலை கிருஷ்ணன் பாடும்போது, அழகான மயிலின் அழகு கொஞ்சும் அத்தனை பாவங்களையும் திரையில் கொண்டு வந்திருப்பது, அழகுணர்வில் இயக்குனரின் தேர்வைக் காண்பிக்கிறது. சஹானா ஆலாபனையின்போது, தஞ்சை பிரகதீசுவரர் ஆலய கோபுர அழகை மெல்ல மெல்ல இணைப்பதும் ரசனை.

இணைப்பு உரை தரும் 'ஸ்பென்சர்' வேணுகோபால், ஒரு தீவிர ரசிகர் மட்டுமல்ல, தம் ரசனையை அழகான வார்த்தைகளில் வெளிப்படுத்தும் ஆற்றல் உள்ளவர் என்பதை இதில் காணலாம். ராம்நாட் கிருஷ்ணனின் மகன்கள் ராமநாதனும், நாராயணனும் அளிக்கும் பார்வைகள், அப்பாவை அப்படியே படம்பிடித்துக் காட்டுகின்றன.

கிருஷ்ணன் அவர்கள் மறைந்து முப்பதாண்டுகளுக்கு மேல் ஆனாலும், அவருடைய இசையின் சிறப்பை இந்தத் தலைமுறையினர் உணர, இந்த டி.வி.டி. நிச்சயம் உதவும்.

இந்த டி.வி.டி.யில் கிருஷ்ணனின் பாட்டுகள் ஒரு பொக்கிஷம் என்றால், ஓவியர் மணியம் செல்வனின் ஓவியங்கள் இன்னொரு பொக்கிஷம். அவ்வை அத்தனையும் அற்புதமான ஓவியப் படைப்புகள்.

– சாருகேசி

# எருமைச் சித்திரம்

வே. இராமசாமி

இதுவொரு எருமைச்சித்திரம். செவக் காட்டில் எருமை மேய்க்க மறுக்கும் தன் மகனை தொலி சீவப்பட்ட வேலிக் கம் பாலோ, சாட்டைக் கம்பாலோ அடி வெளுக்க எந்தத் தகப்பனும் தயங்க மாட் டான். எனது அப்பாவும் அப்படியே. மேற்படி விருப்பமில்லாமல் ஏதேதோ ஏக்கங்களோடு காடு சென்ற என்னை, கைவிடா திருந்தது இயற்கை.

அப்போது நான் எழுத்துக்களை ஒவ் வொன்றாக அறிந்து வந்தேன். ஒரு நெருஞ்சிப்பூ, மேலும் ஒரு நெருஞ்சிப்பூ என்று எழுத்தை அறிய அறிய இனம்புரியாத வியப்பாக இருந்தது. இன்ற ளவும் எழுத்துக்கள் செங் காட்டில் மலர்ந்திருக்கிற நெருஞ்சிப் பூக்களாகவே தோன்று கின்றன. அதை எனது எருமை வயிற்றில் எழுதிப் பார்ப்பேன். என் னைப் போலவே என் சேக்காளிகள் பலருக்கும் எருமை ஒரு நடமாடும் சிலேட்.

கோயில்பட்டி ரோடு எங்களது மேய்ச் சல் கேந்திரம். அதன் இருபுறமும் உள்ள வரிசைப் புளிய மரங்களில் எருமைகள் உரசி, பட்டை உதிராத மரம் ஒன்றுகூடக் கிடையாது. பக்கத்திலிருக்கும் ஆண்டி குளம் கண்மாயில் கொம்புகள் மட்டும் வெளித் தெரியும்படி முங்கியிருக்கும் எருமைகளோடு நாங்களும் இருப்போம். என்ன? மாடுகள் வெளிவரும்போது எங்களது திருட்டு சாக்பீஸ் எழுத் துக்கள் அழிந்து சுத்தமாக இருக்கும். பிற்பாடு எழுத்துப் பொறிப்புப் பணி மீண்டும் நடக்கும்.

மேய்ச்சல் பொழுதுகளில் எனது கனவோ காட்டைவிடப் பெரிதாக இருந்தது. தொடுவான நீலந் தொட்டு என்னெருமை புல் எடுக் கையில் நான் அந்த நீலத்தை எனக்குத் தெரிந்த மேளக்காரனின் மத்தளத்தில் பொருத்தி தாளந் தட்டிக்கொண்டிருப்பேன். எருமை யின் மாய வடிவம் பூமியை அடைக்க, நான் அதன் மீது யாதொரு வன்முறையையும் பிரயோகிக்க இயலாமல் எத்தனையோ முறை சித்தெறும்பாகியிருக் கிறேன். அதன் அலைக்கழிப்பைத் தாங்க முடியாமல் அப்பாவிடம் ஓயாது மன்றாடி வந்தேன். அப்பா எனக்கொரு உபாயம் செய்தார்.

உடைந்த கலப்பையை இரும்புச் சங்கிலியில் கோர்த்து மாட்டின் கழுத்தில் மாட்டிவிட்டார். கலப்பை முட்டியில் தட்டியதால் எருமை நினைத்த நேரமெல் லாம் நெடுந்தொலைவு ஓட முடிய வில்லை. குறிப்பாக, டக்கர்களைக் (டிராக்டர்) கண்டதும், 'இதென்ன நம் காட்டில் புதுப் பொருள்' என்று துரத்தி மறியல் செய்யும் அதன் தனித்துவமான பணி பாதிக்கப்பட்டது. துணி துவைப் பவரின் மூச்சு எதிரொலித்து மிதக்கும் ஊருணியில், நெடுநேரம் குளித்துப் புரண்டு கழிக்க எனது எருமைக்கு இயல வில்லை. தனது ஆட்டத்தை அது கொஞ்சம் குறைத்திருந்தபோது 'சப்பட் டைக் கிடாய்' பயலின் எருமைக் கிடேரி யால் என் எருமையாருக்குத் தீராத பொல் லாப்பு வந்தது.

பட்டணம் வாத்தியாரின் 'ணங்கு ணங்கு' கொட்டுக்குப் பயந்தே மாடு மேய்க்க வந்தவன் சப்பட்டைக் கிடாய். தலையை ஆட்டிக்கிட்டே காலை இழுத்து இழுத்து அவன் நடப்பது, செம்மறி மந்தையில் திரியும் 'சோத்தக்கிடாய்'போல

# செவக்காட்டுச் சித்திரங்கள்

இருக்கும். அது நிமித்தம் அவனுக்கு இந்தப் பட்டப்பேர் வந்திருச்சு. ஆனால், எருமை முதுகில் அவன் சப்பரம் ஏறிவிட்டால், ராசாவாகிவிடுவான். அன்னைக்கும் அப்படித்தான் சவாரி வந்து கொண்டிருந்தான்.

நம்ம எருமையோ இலந்தஞ் செடிக்குள் எதையோ மோப்பம் பிடித்துவிட்டது. புதருக்குள் பாம்பு படமெடுத்துக் காட்டியிருக்கு. அவ்வளவுதான் நம்மாளு, பே... பே...ன்னு காடு அதிர கனைத்துக்கொண்டு தெலிச்சு ஓடினார். வழியில் என்னன்னா, சப்பட்டைக் கிடாயின் பவனி. இதைப் பார்த்ததும் அவனது எருமை தனக்குள் தயாராகிவிட்டது சண்டைக்கு. ரெண்டும்




முட்டுப் போட்டன. சப்பட்டை தெறித்துப் போய் எருக்கலஞ் செடிக்குள் விழுந்தான்.

கொம்புகளைக் கோத்துக்கொண்டு நெற்றியால் ஒன்னுக்கொன்னு முண்டித் தள்ளின. அவற்றின் தாறுமாறான கால் தடத்தால் அந்த இடத்தில் மண் வழவழத் ததுபோல் பெயர்ந்துவிட்டது. உடைந்த கலப்பை ஊஞ்சலாடி என் மாட்டுக்கு இடைஞ்சலாக இருந்தது. சப்பட்டைக் கிடாயின் மாடு துணிந்தடித்தது. கனைப் பொலிகளோ காடு கிழிவது மாதிரி எதிரொலித்தன. அவனும் நானும் பின்னாலிருந்து அடி நொறுக்கினாலும் மாடுகள் விலகுவதாயில்லை. நெற்றியில் ரத்தம் வழிந்து அது சிவப்புச் களகுபோல் தெரிந்தது. எருமைகள் மல்லுக்கட்டுவது போல பிணையலடித்துக் கொண்டு கிடக்கும். சீக்கிரம் துவந்த யுத்தம் முடிவுக்கு வராது.

கடேசியில் எப்படியோ கொம்புகளை விலக்கிக்கொண்டன. நாங்கள் இதுதான் சமயமென்று ஆளுக்கொரு திசையில் மாடுகளை அடித்து விரட்டினோம். என் எருமைக்கே காயங்கள் அதிகம். அந்தச் சிவந்த நெற்றியை நான் என்றும் மறக்க முடியாது. அதிலிருந்து காக்கைகளுக்குப் பதற வேண்டி வந்தது. மாடோ, முழுசா மாறிப்போய்விட்டது. ஒழுங்கா மேயவும் இல்லை. கன்னுக் குட்டிக்குப் பால் தரவுமில்லை. அதன் நன்னடத்தையைக் கண்டு,





# எருமை என்பது கள்ளமின்மையின் வடிவம்!

அப்பா உடைந்த கலப்பையைக் கழுத்தி லிருந்து கழற்றிவிட்டார். கொம்புகள் ஆட் டம் கண்டு எப்போது வேண்டுமானாலும் உதிர்ந்துவிடும் நிலை வந்தது. என் காடு சோக வனமாய் மாறியது. காட்டில் மறு படியும் சப்பட்டைக் கிடாயின் எருமை யைச் சந்தித்துவிடாமல் வேறு திக்கத்தில் மாடு மேய்த்தேன். ஆனாலும் என்னெரு மையை நான் நிரந்தரமாகப் பிரியும்படி வந்து சேர்ந்தது ஒரு யானை...

**எ**ங்கோ நெடுந்தூரம் செல்கிற பெரிய பெரிய கரண்ட்டு கம்பங்களின் கீழே என் மாடு ஒரு நாள் மேய்ந்திருந்தது. மின் கம்பியில் ஒரேயொரு கரிச்சான். மற்றபடிக்கு நான் மட்டும் இருந்தேன். ஒன்னு ரெண்டு வாகனங்கள் கோயில்பட்டி ரோட்டில் போய்க்கொண்டிருந்தன. அப் போது மணிச்சத்தம் கேட்டது. மாடு பைய நிமிர்ந்தது. அந்த முட்டைக் கண்களில் அப்படியொரு பயத்தை இதுவரை நான் பார்த்ததில்லை. புளிய மர அமைதியின் பின்னணியில் ஒரு கோயில் யானை கிழக்கேயிருந்து ரோட்டில் வந்தது. பாகன் அது மேலே இருந்தான்.

யானையைக் கண்டதும் எருமை பாய்ந்தடித்து ஓடியது. யானைமேல் போய் இது விழுந்தால்... கதை முடிந்தது. யானையோ இதைக் கொஞ்சமும் சட்டை செய்யவில்லை. அது பாட்டுக்கு காதை பட்டாம்பூச்சி றெக்கைபோல் மூடித் திறந்து மூடித் திறந்து போனது. பாகன்கூட எரு மையின் அநியாய கனைப்பைப் பொருட் படுத்தாமல் சும்மா உக்காந்திருந்தான். எருமை கொஞ்ச தூரம் பின் தொடர்ந்தது... பாகன் ஏதோ சத்தமாய்ச் சொல்லி யானை யைத்தான் அதட்டினான். அதற்குள் ஏற் கெனவே அச்சக் காச்சலடித்துக் கிடந்த எருமை பிடித்தது ஓட்டம். மேற்கானிக்குப் போனது போனதுதான்.

என்னிதயம் புல்லிதழாய் நடுங்க நடுங்க, நான் மட்டும் வீடு வந்து அப் பாவிடம் சொன்னேன். நல்லவேளை எனக்கு அடி கிடைக்கவில்லை. அப்பா சைக்கிளை எடுத்துக்கொண்டு ஊர் ஊராக மாட்டைத் தேடினார். கன்னுக்குட்டி கிடந்து கதறியது. எருமை கிடைக்கவேயில்லை. நாலைந்து நாட்களுக்குப் பிறகு, தானாகத் தொழுவில் வந்து நின்ற என் மாட்டுக்கு ரெண்டு கொம்பும் இல்லை. உடம்பெல்லாம் சகதி உறைந்து... பாவமாக இருந்தது. சில நாட்களில் வியாபாரியைக் கூட்டி வந்து எருமையையும் கன்றையும் அப்பா விற்று விட்டார். அவர் எருமை நாகரிகத்திலிருந்து பசுமாட்டு நாகரிகத்துக்கு மாறிப்போனார்.

ஆனால், எனக்குள் மட்டும் எருமைச் சித்தன் இன்று வரை வாழ்கிறான். அவன் காட்டிய காட்டிலிருந்தே இந்த வாழ்வை புரிய முயன்றேன். யாராவது பேய்க் காளானைப் பார்த்து எருமைக்காளான் என்றால் நான் ஒப்ப மாட்டேன். ஏனென் றால், எருமை என்பது கள்ளமின்மையின் வடிவம். அந்த அறியாமையின் சித்திரம் என் கண்ணுக்கருப்பில் எப்போதுமிருக் கிறது பத்திரமாக.

**(மண் வாசம் வீசும்)**





# கலைஞரால் கிடைத்த கைதட்டு!

திண்டுக்கல் லியோனி பட்டிமன்றக் குழுவின் ஆஸ்தான பேச்சாளரான கவிஞர் நந்தலாலா, தமது சேனல் பட்டிமன்ற அனுபவங்களை நம்மிடம் பகிர்ந்து கொண்டார்...

''வட இந்திய சாமியார் ஒருவர், 'கலைஞர் தலையைச் சீவிட வேண்டும்' என்று ஆவேசமாகப் பேசியிருந்த நேரத்தில், நான் கலைஞர் டீ.வி.யின் பட்டிமன்றத்தில் பேசினேன். 'தன் தலையைத் தானே சீவ முடியாதவர் கலைஞர். அவர் தலையைச் சீவிட வேண்டுமென ஆணையிட்டிருக்கிறார் ஒருவர்!' என்று குறிப்பிட, அரங்கமே கைதட்டலில் அதிர்ந்தது.

விஜய் டீ.வி.யில் திரைப்படம் குறித்து ஒரு பட்டிமன்றம். என்னுடைய பேச்சில், தங்கர்பச்சானின் 'பள்ளிக்கூடம்' சினிமா குறித்துச் சிலாகித்துப் பேசினேன். திருவாரூர் அருகே கங்கலாஞ்சேரி கிராமத்தின் துவக்கப் பள்ளியில் என் பால்ய கால குறும்புகளையும் அப்போது நினைவு படுத்தினேன்.

மறுநாள் காலை சென்னையிலிருந்து ஒரு போன். தம் மகனின் திருமணத்தில் நான் அவசியம் பங்கேற்று வாழ்த்திப் பேச வேண்டும் என்று வம்படியாகக் கேட்டுக் கொண்டனர் ஒரு குடும்பத்தினர். 'என்னை எதற்காக அழைக்கிறீர்கள்?' எனக் கேட்டேன்.

பெண் வீட்டார் கங்கலாஞ்சேரி கிராமம். பட்டிமன்றத்தில் என் பேச்சைக் கேட்க நேர்ந்த அவர்கள், 'நம்மூரு பள்ளிக் கூடத்துல படிச்ச அவருதான், நம்ம வீட்டுக் கல்யாணத்துலயும் வந்து பேசணும்' என்று வற்புறுத்திக் கூறியிருக்கின்றனர். இது என் மனதை மிகவும் தொட்டது.

மலேசியாவில் எங்கள் குழுவின் பட்டிமன்றம். கோலாலம்பூர் நகரில், பிரம்மாண்டமான கடை ஒன்றின் உள்ளே சென்றுவர ஆசைப்பட்டோம். பெரிய ஹால். ஒவ்வொரு பக்கமும் தொலைக்காட்சிப் பெட்டி. அனைத்திலும் எங்கள் பட்டிமன்றக் காட்சி ஓடிக்கொண்டிருந்தது இன்ப அதிர்ச்சி.

பட்டிமன்ற ஒலிநாடாக்கள் மூலம் எங்களின் குரல்கள் மட்டுமே எல்லோர்க்கும் அறிமுகமாகி இருந்தது. கடந்த பத்தாண்டுகளில் தொலைக்காட்சிப் பட்டிமன்றங்கள், எங்களின் முகங்களை உலகம் அறியச் செய்துள்ளன!'' என்று பூரிக்கிறார் நந்தலாலா.

செய்திச் சித்திரம்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



கடந்த வருடத்தில் நிறைய சாதனைகளை மட்டு மில்லாமல், சச்சரவுகளையும் சந்தித்தது இந்திய விளையாட்டுத் துறை. மனத்தில் பதிந்தவை என்று இவற்றை மட்டுமே சொல்ல முடியும்.

## பெரிய காரியம்

நீண்ட நாளுக்குப் பிறகு இந்த வருடம்தான் ஹாக்கி வீரர்கள் அதிகமாகத் தலைப்புச் செய்திகளில் அடிபட்டனர். அனைத்தும் அவர்கள் செய்த சாதனைகளுக் காக மட்டும் அல்ல என்பதுதான் வேத னைக்குரியது. சென்னையில் நடந்த ஆசி யக் கோப்பையை இந்திய அணி வென்ற போது பாராட்டக் கடமைப்பட்டவர்கள், தங்கள் வாழ்த்துகளை வெளிப்படுத்தத் தவறினர். அப்போதுகூட ஹாக்கி வீரர்கள் அமைதியாகத்தான் இருந்தார்கள். ஆனால், இந்திய கிரிக்கெட் அணி 20-20 உலகக் கோப் பையை வென்றபோது கவுன்சிலர் வரைக் கும் பாராட்டுத் தெரிவிக்க, ஹாக்கி வீரர் களுக்கு ரத்தம் கொதித்துவிட்டது. அழ ஆரம்பித்தார்கள். தவித்த வாய்க்கு இறுதி யில் தண்ணீர் கொடுக்கப்பட்டது.

2007ல் மொத்தம் மூன்று முக்கிய போட்டிகளில் கலந்துகொண்ட இந்திய அணி, சுல்தான் அஸ்லான் ஷா கோப்பை மற்றும் பெல்ஜியத்தில் நடந்த சாம்பியன் சேலஞ்ச் போட்டியிலும் மூன்றாவது இடம் பிடித்தது. இறுதியாக ஆசியக் கோப்பை யைச் சொந்த மண்ணில் வென்றது. 2008 ஒலிம்பிக் போட்டிக்கு இன்னமும் இந்திய அணி தகுதி பெறவில்லை. இப்போதைக் குத் தகுதி பெற்றாலே பெரிய காரியம்.

## இணையும் கைகள்

தொண்ணூற்றாறாம் வருடம் அட் லாண்டாவில் நடைபெற்ற ஒலிம்பிக் போட்டியில், ஒற்றையர் ஆட்டத்தில் வெண்கலம் வென்றார் லியாண்டர் பயஸ். அதன்பிறகு, இரட்டையர் ஆட்டங்களில் அதிக கவனம் செலுத்தத் தொடங்கினார். பத்து வருடங்கள் பயஸும் மகேஷ் பூபதி யும் ஒன்றாக ஆடினார்கள். மனஸ்தாபங்கள் இருவரையும் பிரித்தன. 2006 ஏசியன் கேம் ஸில் ஒன்று சேர்ந்தனர். ஆனால், குழுப் போட்டியில் இந்தியா தோல்வி அடைந்த போது பூபதி மீது அர்ச்சனை செய்தார் பயஸ். மீண்டும் பிரிந்தனர். 2008 பீஜிங் ஒலிம்பிக் போட்டி நடப்பதையொட்டி இன்னொரு முறை இருவரும் கைகோக்க



இருக்கின்றனர். இந்த முறை எப்படியாவது பதக்கம் வெல்வார்கள் என்கிற எதிர்பார்ப்பை இப்போதிருந்தே உண்டாக்கிவிட்டனர் இருவரும்.

சானியாவுக்கு 2007 முக்கியமான வருடமாக அமைந்துவிட்டது. உலகின் 27வது நிலை வீரர் என்கிற தகுதியை அடைந்தார். காயம் காரணமாகச் சில காலம் ஆடாமல் இருந்ததால், ரேங்கிங் 31 வரைக்கும் இப்போது இறங்கிவிட்டது. இரண்டு, மூன்று சுற்றுகள் வரைக்கும் சென்று தோற்று வெளியேறுவதை இனிமேலாவது சானியா நிறுத்த வேண்டும். போரடித்துவிட்டது.

# ஹீரோ ஆஃப் த இயர்!

## மெல்ல... மெல்ல...

புதிய ஜென்மம் எடுத்திருக்கிறது இந்தியக் கால்பந்து அணி. டெல்லியில் நடந்த நேரு கோப்பையை வென்று தம் மூக்கின் மேலேயே விரல் வைத்து ஆச்சர்யப்பட்டுக் கொண்டது. முதல் முறையாக இந்தியக் கால் பந்து பற்றிய செய்திகளைப் பத்திரிகைகளில் பார்க்க முடிந்தது. அந்தச் சூட்டோடு 2010 உலகக் கோப்பை மற்றும் 2008 ஒலிம்பிக் தகுதிச் சுற்றுப் போட்டிகளில் கலந்துகொண்டு தோற்றுப் போனது. வருட ஆரம்பத்தில் 157வது ரேங்கிங்கில் இருந்த இந்திய அணி, இப்போது 143 வரைக்கும் வந்துவிட்டது. கால்பந்துக்கு வயது நூறாகியிருக்கலாம். ஆனால், இந்தியாவில் இப்போதுதான் பிறந்து தவழ ஆரம்பித்திருக்கிறது.

அத்லெடிக்கை எடுத்துக்கொண்டால், 2004 சிட்னி ஒலிம்பிக்கில் நிறைய ஏமாற்றங்கள். மிகவும் எதிர்பார்த்த அஞ்சு பாபி ஜார்ஜ் ஐந்தாவது இடம்தான் பிடித்தார். 2008 ஒலிம்பிக்கில் நிச்சயம் பதக்கம் வெல்வேன் என்று சமீபத்தில் கூறியிருக்கிறார் அஞ்சு. மற்றபடி அத்லெட்டிக்கில் புதிய நம்பிக்கை நட்சத்திரங்கள் எதுவும் தென்படவில்லை. சென்ற ஏசியன் கேம்ஸில் ஒருவர் தென்பட்டார். ஆனால், அவரைப் பற்றிப் பேசுவதும் எழுதுவதும்கூடத் தகாத செயலாகிவிட்டது. நிறைய திறமைகள் இப்படித்தான் ஏதோவொரு காரணத்துக்காக முடக்கப்பட்டுவிடுகின்றன.

## சாதனையும் சோதனையும்

இந்திய கிரிக்கெட்டைப் பற்றி என்ன சொல்வது? இங்கும் ஒரு நம்பிக்கையான வீரரைக் காண முடியவில்லை. டெண்டுல்கர், கங்குலி, யுவராஜ் ஆகிய வீரர்கள் இல்லாவிட்டால் இந்திய கிரிக்கெட் அணிக்கு உலகமே இருண்டுவிடும்போல. நடந்து முடிந்த 20-20 ஐ.சி.எல். போட்டிகளில் ஒரே ஏமாற்றம் - வாய்ப்பைச் சரியாகப் பயன்படுத்திக்கொண்டார் என்று ஒரு இந்திய வீரரைக்கூட கட்டிக்காட்ட முடியவில்லை.

ஆயிரம் சொல்லுங்கள். 2007ன் ஹீரோ ஒருவர் மட்டும்தான். அது விஸ்வநாதன் ஆனந்த்.

ச.ந. கண்ணன்

# 70 முதல் 7 வரை.... ராஜாஜி

இருபது - இருபது உலகக் கோப்பைக்கான இறுதி ஆட்டம் திக்திக்கென்று இதயம் படபடக்க டீ.வி.யில் ஒளிபரப்பாகியது. நாற்காலியை விட்டு எத்தனை முறை குதித்தெழுந்தேன் என்று கூற முடியாத அளவுக்குப் பரபரப்பு. இந்திய வீரர்கள் கொடி பிடித்து மைதானத்தைச் சுற்றி ஓடி வந்தார்கள். கேப்டன் டோனி, தம்மை நெருங்கி வந்த ஒரு சிறுவனுக்குத் தம்முடைய சட்டையைக் கழற்றி அணிவித்தபோது, அந்தச் சிறுவன் முகத்தில்தான் எத்தனை பெருமிதம்!

அத்தகைய ஒரு பெருமித உணர்வு எனக்கும் ஒருமுறை சிறுவனாக இருந்தபோது ஏற்பட்டது. அது எப்போதெனில், ராஜாஜியை நான் 'அவுட்' ஆக்கியபோது! அப்போது நாங்கள் ஸ்லேடன் கார்டனில், கல்கி காரியாலயத்துக்கு அருகிலேயே வாடகை வீட்டில் குடியிருந்தோம். மாடியும் கீழுமாக ஒரே மாதிரி பல வீடுகளை, டாக்டர் குருசாமி முதலியார் அந்தத் தெருவில் கட்டிப்போட்டிருந்தார். பின்னாட்களில் அது டாக்டர் குருசாமி முதலியார் சாலையாகவே பெயர் மாறிவிட்டது.

எங்கள் வீட்டுக்குச் சற்றுத் தொலைவில் ஒரு மலையாள கிறிஸ்தவ குடும்பம், டாக்டருக்குச் சொந்தமான மற்றொரு வீட்டில் குடியிருந்தது. சாண்டி அவர்களுக்கு நான்கு பிள்ளைகள்; சாண்டி சாண்டி, ஜார்ஜி சாண்டி, கூக்கி சாண்டி, டாமி சாண்டி.

கூக்கி சாண்டியும் நானும் சம வயதினர். வீட்டின் எதிரே இருந்த மைதானத்தில் பட்டம் விடுவதற்கு முன், நூலுக்கு 'மாஞ்சா' ஏற்ற, பாட்டிலை உடைத்துக் கண்ணாடியை அரைத்தது இன்னும் நினைவிருக்கிறது. ஜார்ஜி புறா வளர்த்ததோடு, தமது புறாவை ஏவி, உயரத்தில் பறக்கும் வேறு ஒரு வீட்டைச் சேர்ந்த புறாவை வளைத்துக்கொண்டு வருமாறு செய்வான். புறாவை அனுப்பி புறா பிடிக்கும் இந்த ஆற்றலை நான் பிரமிப்புடன் பார்த்துக் கொண்டிருப்பேன். புறா முட்டைகளுடன் புறாக்களும் அந்தக் குடும்பத்தாரின் வயிற்றுக்குள் போய்விடும் என்பது அப்போது எனக்குத் தெரியாது.

உலக யுத்தம் முடிந்து ஆஸ்திரேலிய கிரிக்கெட் கோஷ்டி ஒன்று சென்னை வந்தபோது, என்னையும் கூக்கியையும் கிரிக்கெட் ஜுரம் பற்றிக்கொண்டது. சைக்கிள் டியூப் கத்தரித்தும் பலகையைச் செதுக்கியும் நாங்களே தயாரித்த பந்தும் மட்டையும் இருந்தபோதிலும், நிஜமான கிரிக்கெட் உபகரணங்களுக்கு ஏங்கி அப்பாவிடம் மனு செய்தேன். 'கல்கி', ஐந்து நாள் கிரிக்கெட்டின் எதிரி. அவருடைய தூண்டுதலின் பேரில், 'கங்காதரா மாண்டாயோ?' என்ற தலைப்பில் கிரிக்கெட் மேட்சை 'பகீரதன்' காட்டமாக விமர்சிக்க, கல்கியில் அப்போதுதான் பிரசுரமாகியிருந்தது. ஆயினும் என்ன? என் உணர்வுகளைப் புண்படுத்தவில்லை அப்பா. அதே பகீரதனை அழைத்தார். 'தம்பி ரொம்ப ஆசைப்படறான். அவனை அழைச்சுண்டு மவுண்ட் ரோடுக்குப் போய், சிறுவர்களுக்கான கிரிக்கெட் ஸெட் ஒன்று வாங்கிக் கொடு' என்றார். ஜிப்பாவை உயர்த்தி, உள் சட்டைப் பையிலிருந்து பணமும் எடுத்துக் கொடுத்தார்.

ஆஹா! அந்த கிரிக்கெட் ஸெட்டைப் பெருமிதத்துடன் நான் கூக்கியிடம் காட்ட, அவன் அடைந்த பரவசம்! வீட்டைச் சுற்றி தோட்டம் உண்டு. பக்கவாட்டில் அமைந்த நடைபாதையில் ஒரு நாள் மாலை நாங்கள் கிரிக்கெட் ஆடிக்கொண்டிருந்தபோது,

# 10



# ஆடிய கிரிக்கெட்!

## கல்கி ராஜேந்திரன்

ராஜாஜி வருகை தந்தார். குற்றாலத்திலிருந்து வந்து எங்களுடன் தங்கியிருந்த ரசிகமணியையும் கிருஷ்ணமூர்த்தியையும் காண வந்தவர், ''அட! கிரிக்கெட்டா!'' என்று கேட்டார். ''எங்கே இரண்டு பந்து போடு பார்க்கலாம்'' என்று கோரிக்கை வைத்தவாறே கூக்கியிடமிருந்து பேட்டை வாங்கிக்கொண்டார். அவன் மனமின்றி பேட்டைக் கொடுத்துவிட்டு 'கேட்ச்' பிடிக்கத் தயாராய் நின்றான். விக்கெட்டுக்குப் பின்னால் டாமி ஸ்டைல் காட்டினான்.

எங்கள் விளையாட்டில் குறுக்கே புகுந்தார் என்பதால் எனக்குக் கோபம் வர, வேகமாகப் பந்து வீசினேன். ராஜாஜி மட்டையைச் சுழற்றினார். மட்டைதான் சுழன்றதே தவிர, பந்தை அது தாக்கவில்லை. பந்து ராஜாஜியின் காலைப் பதம் பார்த்தது. என்னை பயம் கவ்வியது. நிஜ கிரிக்கெட் பந்து, 'பேட்' அணியாத காலில் பட்டால் எப்படி வலிக்கும் என்பது எனக்கு அனுபவத்தில் தெரியும். 'ஸி.ஆர். அண்ணாவுக்கு வலிக்குமே' என்ற கவலை ஒரு பக்கம். 'அப்பா என்ன சொல்வாரோ' என்ற பயம் மறுபக்கம். அவரை அவுட் ஆக்கிவிட்டோம் என்ற பெருமிதம் இன்னொரு பக்கம்.

ராஜாஜிக்கு வலித்ததென்றால் அதை அவர் காண்பித்துக்கொள்ளவில்லை. ''என்ன, எல்.பி.டபிள்யூவா?'' என்று கேட்டுவிட்டு பேட்டை கூக்கியிடம் கொடுத்தார். ''பெவிலியனுக்குத் திரும்பறேன்'' என்று சிரித்துக்கொண்டே கூறி

விட்டு வாசல்படி ஏறினார். நடையில் வேதனை சிறிது தெரியத்தான் செய்தது.

'அவுட் இல்லை அவுட் இல்லை' என்று சண்டை பிடித்துச் சாதிப்பதுதான் சிறுவர்களாகிய எங்களுக்குப் பழக்கம். 'ஹௌஸ் தட்' என்று யாரும் கேட்கவுமில்லை; அம்பயர் 'அவுட்' கொடுக்கவுமில்லை. தமக்குத்தாமே 'அவுட்' கொடுத்து வெளியேறினார் ராஜாஜி. விளையாட்டில் மட்டுமல்ல; வாழ்க்கையிலும் அந்த உயர்ந்த பண்பைக் கடைப்பிடித்தார்.

கவர்னர் ஜெனரல் பதவி வகித்து வந்த அவரே, தொடர்ந்து ராஷ்டிரபதியாக (குடியரசுத் தலைவராக) நீடிக்க வேண்டும் என்று விரும்பினார் நேருஜி. வேறு பலரும் அதே அபிப்பிராயத்தில் இருந்தனர். ஆனால், பாபு ராஜேந்திர பிரசாத் அந்தப் பதவியில் அமர விரும்புவதாகத் தெரிய வந்த மறுகணமே, ராஜாஜி கவர்னர் ஜெனரல் மாளிகையிலிருந்து வெளியேற மனத்தளவில் சித்தமாகிவிட்டார். அப்போது 'கல்கி'க்கு எழுதிய கடிதத்தில் 'ராஷ்டிரபதி பதவியை நமது அன்புக்குரிய ஒருவர் விரும்புவதாகத் தெரிய வந்துள்ளது. எனவே, நான் சீக்கிரமே சென்னை வாசியாகி விடுவேன் என்பதை நீங்கள் எழுதிவிடலாம்' என்று பகுதி அளவில் அனுமதி கொடுத்தார்.



* கல்கி குடும்பத்துடன் ராஜாஜி...

இதற்குச் சிறிது காலத்துக்குப் பிறகு, தமிழ்நாடு காங்கிரஸ் எம்.எல்.ஏ.க்கள், தேர்தலில் அறுதிப் பெரும்பான்மை கிடைக்காததால் என்ன செய்வது என்று புரியாமல் குழம்பினார்கள். ராஜாஜி தலைமை ஏற்றால்தான் நிலைமையைச் சமாளிக்க முடியும் என்று கருதி, கெஞ்சாத குறையாகக் கோரிக்கை வைத்து, அதற்கு நேருஜியின் சிபாரிசையும் நாடினார்கள். ராஜாஜி மனமின்றி இசைந்தார். அதே காங்கிரஸ் எம்.எல்.ஏ.க்கள் தங்களை ஸ்திரப்படுத்திக் கொண்ட பிறகு, ராஜாஜி முதலமைச்சர் பதவியில் நீடிப்பதை விரும்பவில்லை. இது தெரியவந்தபோது உடனடியாகப் பதவி துறந்து, ஓய்வுபெறத் தயாரானார் ராஜாஜி. உன்னத நோக்கங்களை உள்ளடக்கிய அவருடைய கல்வித் திட்டமும் காங்கிரஸ்காரர்களால் கைவிடப்பட்டது.

கடமை உணர்வு காரணமாகப் பதவி ஏற்று, தாமரை இலையில் நீர்த் துளிபோலப் பற்றுதலின்றி பதவி வகித்த ராஜாஜியை, 'அரியாசனத்தில் ஜனகமகாராஜா' என்று போற்றி 'கல்கி' எழுதியதில் வியப்பென்ன?

**(பேசுவோம்)**



"ஏங்க, இங்கே லாடம் கட்டற இடம் எதுங்க?"

"மொட்டையா கேட்டா எப்படி? மாட்டுக்குக் கட்டணும்னா, பக்கத்துத் தெருவுக்குப் போவணும். மனுஷனுக்குன்னா தெரு முனைல போலீஸ் ஸ்டேஷன் இருக்குது!"

– வெ.சீதாராமன்

# வீட்டுக்குள்ள பாம்பு!



"எங்க வீட்டுக்குள்ள பாம்பு வந்திருச்சு. அதனால பாம்பாட்டியைக் கூப்பிட்டு அடிச்சோம்!"

"அடப்பாவிகளா! பாம்பு வந்ததுக்கு பாம்பாட்டியை எதுக்குடா அடிச்சீங்க!"

– சேலம் எஸ்கா



"உங்க மாமியார் வாழைப்பழத்துல வழுக்கி விழுந்துட்டாங்களாமே, என்னடி ஆச்சு?"

"பழம் நசுங்கிப் போச்சுடி."

– எல்.மூர்த்தி



**● ஜி.லட்சுமி வாசுதேவன், வேளச்சேரி**

***மீசையில் மண் ஒட்டாமல் குப்புற விழ உங்களால் முடியுமா?***

நாடகத்துக்காக ஒட்டிய மீசையை எடுத்துவிட்டு குப்புற விழுந்தால், ஒட்டாது மண் மீசையில். குப்புற விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை என்ற சமாளிஃபிகேஷனுக்கு இந்த பதிலே ஓர் உதாரணம்.

**● என்.பாலகிருஷ்ணன், சென்னை**

***சித்து விளையாட்டு என்றால் என்ன?***

விளையாட்டாகச் சொன்னால் நவ்ஜோத் சிங் சித்து விளையாட்டு கிரிக்கெட். இதையே தத்துவமாகச் சொல்லப்போனால் சும்மா இருந்த சத்-சங்கு, தன்னைத்தானே ஊதிக்கொண்டு ஆனந்தம் கொள்வதே சித்து விளையாட்டு... இதைத்தான் சத்-சித்-ஆனந்தம் என்பார்கள். சத்தின் இந்தச் சித்து விளையாட்டை, லீலையாகப் பார்க்க வரும் ஆனந்தம், த்வைதம்... பார்த்தும் பார்க்காமல் வரும் ஆனந்தம் அத்வைதம்... An eternal child playing an eternal game in an eternal garden என்பது பகவான் ஸ்ரீ அரவிந்தரின் வாக்கு.



**● குட்டி பிரசன்னா, விழுப்புரம்**

***காதலில் தோற்ற ஆணுக்கு அடையாளம் தாடி... காதலில் தோற்ற பெண்ணுக்கு என்ன அடையாளம்?***

தாலி... ஏனென்றால் அவள் இவனை விட்டு வேறு ஒருவனை திருமணம் செய்துகொண்டதால்தானே, அவன் தோற்று தாடி வளர்க்கிறான். இப்படி இல்லாமல் பொதுவாகச் சொல்லப்போனால், காதலில் தோற்ற ஆணுக்கு அடையாளமாக தாடி இருக்கும். காதலில் தோற்ற பெண்ணுக்கு அடையாளமாக அவள் தோற்றமே வாடி இருக்கும்!

**● வி.ஜி.சத்தியநாராயணன், நங்கநல்லூர்**

***திருமலையை தமிழ்நாட்டுடன் இணைத்திருந்தால் எப்படி இருந்திருக்கும்?***

திருப்பதியாக... ஸாரி திருப்தியாக இருந்திருக்கும்.

**● பரிமளா சுந்தரேசன், பெங்களூர்**

***கிரேஸி, நீங்கள் சைவமா? அசைவமா?***

இரண்டும் இல்லை... வைணவம்.

**● குலசை க.மீ.நஜ்முதீன், காயல்பட்டினம்**

***முதல் மனைவி இருக்க, இரண்டாம் தாரம் திருமணம் செய்துகொள்கிறவனுக்கு, என்ன தண்டனை தரலாம்?***

இதைவிட வேறு ஒரு தண்டனை

## கிரேஸியைக்

வேண்டுமா! இதில் வேடிக்கை என்னவென்றால், குற்றமே தண்டனையாகி விட்டது.

**● த.ஞானசெல்வன், நெல்லை**

***திடீரென்று நமீதா வந்து உங்களிடம் 'ஐ லவ் யூ' என்று சொன்னால், என்ன சொல்வீர்கள்?***

"நமீதா... ஐ லவ் யூ-னு உணர்ச்சி பூர்வமா சொல்லிட்டீங்க. நான் இதை எதிரே பாக்கலை, புல்லரிக்குது. இதே

உச்சரிப்பு, முகபாவத்தோடு ஷாட்டுல ஹீரோகிட்ட இந்த டயலாக்கைச் சொல் லிட்டீங்கன்னா, என்னோட வசனத்துக்கு தியேட்டர்ல க்ளாப்ஸ் கிடைக்கும்'' என்று அந்தப் படத்தின் வசனகர்த்தாவாகக் கேட்டுக்கொள்வேன்.

● **அனன்யா, திருச்சி**

***கல்கி அவதாரம் எப்போது சார்?***

இந்தக் கேள்வியைப் படித்துவிட்டு உறங்கிய எனக்கு, மின்னல் கதை போல, ஒரு மின்னல் கனவு வந்தது. கனவில் 'மனிதர்கள் ஜாக்கிரதை' என்று போர்டு போடும் அளவுக்கு, பூலோகத்தில் அதர்மம் மலிந்துவிட்டது. கல்கி அவதாரம் எடுக்க இதுவே தக்க தருணம் என்று பிரம்ம தேவன் நச்சரிக்க, மூவுலகை அளந்த தன் உருவை அணுவாக மாற்றிக்கொண்டு, பூலோகப் பிரவேசம் செய்கிறார் மகா



# ஆணுக்கு தாடி... பெண்ணுக்கு?

## கேளுங்கள்

விஷ்ணு. முடிவு செய்யப்பட்ட கல்கி அவதாரத் தாயின் கருவில், திருவின் கணவர் எழுந்தருளுகிறார். கல்கியின் அவதாரத் தந்தை, தனது மனைவியான அவதாரத் தாயைப் பார்த்து, 'தோ பார். நமக்குக் கல்யாணமாகி ரெண்டு வரு ஷம்கூட ஆகல. இன்னும் நாம அனு பவிக்க எவ்வளவோ இருக்கு. இப்பப் போயி இடைஞ்சலா ஒரு குழந்தை தேவையா? பாவ புண்ணியம் பாக்க நீ என்ன கிருஷ்ணரையா சுமக்கற...' என்று கூறி அவளைச் சமாதானம் செய்து, அருகிலிருக்கும் நர்சிங் ஹோமுக்கு அழைத்துச் செல்கிறார். சிறிது நேரத்தில் நர்சிங்-ஹோம் ஜன்னல் கதவு, வைகுந்த வாசலாகத் திறக்க, அதன் வழியாக ஒரு ஒளிப் பந்து - பாரதியார் பாஷையில் அக்னிக் குஞ்சு, விண்ணுலகை நோக்கிச் செல்கிறது. இப்படியாக, கருவிலே கலைந்தது கல்கி அவதாரம். மேற்கொண்டு என்ன நடக்கிறது என்று பார்ப்பதற்குள், என் கனவும் கலைந்தது. ●

# கனவில் வந்த ஸ்நேகிதன்...



**ச**ன் மியூசிக்கின் நம்பர் ஒன் காம்பியரான ஹேமா சின்காவுடன் ஒரு சிட்சாட் :

**பிடித்தது?**
''அப்பா - அம்மா''

**பிடிக்காதது?**
''கரப்பான்பூச்சி''

**நேசிப்பது?**
''சன் மியூசிக் நேயர்கள்''

**வெறுப்பது?**
''ஜொள்ளுப் பார்ட்டிகளை''

**பயப்படுவது?**
''பொய்க்கு''

**நெருங்கி இருப்பது?**
''மனசாட்சிக்கு''

**நீண்ட நாள் ஆசை?**
''கவிதை எழுதுவது''

**நிறைவேறின ஆசை?**
''நம்பர் ஒன் இடம்''

**மறக்காமலிருப்பது?**
''பள்ளி நாட்களை''

**அடிக்கடி நினைப்பது?**
''கனவில் வந்த முகம் தெரியாத ரகசிய ஸ்நேகிதனை''

**மனதைப் பாதித்த சம்பவம்?**
''வீட்டு குட்டீஸுடன் வண்டியில் சென்றபோது சிக்னலில் எதிர்ப்பட்டு பிச்சை எடுத்த குட்டீஸ்''

**புது வருட லட்சியம்?**
''லட்சியம் என்று எதையாவது முன் வைத்துக்கொள்வது!''

**- மதுமிதா**

*அட்டை மற்றும் படம் :*
**ஸ்ரீஹரி**



# பழிக்குப் பழி!

ஓடி வந்த சிறுமி சுபா, காலில் சோபா பலமாக இடித்ததில் வலி தாங்காமல் ''அம்மா'' என அலறியபடி உட்கார்ந்தாள்.

அவள் குரல் கேட்டு வந்த சசி அவளை அணைத்துச் சமாதானப்படுத்தியபடி, ''இந்த சோபாதானே உன்னை இடித்தது! இதை அடித்து விடுகிறேன். அழாதே'' எனக் கூறி, சோபாவைக் கைகளால் அடித்தாள்.

சுபா தன் வலியை மறந்து சிரித்தாள். அங்கு வந்த தாத்தா இதைப் பார்த்து விட்டு மெல்லச் சொன்னார், ''இதோ பாரு சசி, அடிக்கு அடி என்ற பழிவாங்கும் உணர்வை குழந்தைகளுக்கு இப்பவே சொல்லித் தராதே. 'சோபா உன்னை இடிக்கவில்லை. நீதான் கவனிக்காமல் ஓடி வந்து சோபாவில் இடித்துக்கொண்டாய். இனி கவனமாகப் பார்த்து ஓடிவா' என்று சொல்லிக் கொடு. குழந்தைகளுக்கு தவறை உணர்த்துவதை விட்டு, இடித்த சோபாவை அடித்துப் பழி வாங்கும் எண்ணத்தை வளர்க்காதே'' என்றார். தன் தவறை உணர்ந்து தலை குனிந்தாள் சசி.

**– பம்மல் லலிதா செல்லப்பா**

## மின்னல் கதைகள்

# அடிமை!



**''பை**யன் கை நிறைய சம்பாதிக்கிறான்! பிச்சு பிடுங்கல் எதுவும் கிடையாது!''

''என்ன எதிர்பார்க்கறாங்க தரகரே?''

''எதுவும் எதிர்பார்க்கலே!''

''என்ன சொல்றீங்க?''

'' 'நல்ல குடும்பம், அடக்கமான பொண்ணு இருந்தால் போதும்'னு சொல்றாங்க!''

''சாரி! இந்த வரன் நமக்கு வேணாங்க.''

''என்னங்க சொல்றீங்க?''

''குடும்பம்னா சண்டை, சச்சரவு வரத்தான் செய்யும். பொண்ணுன்னா வாய் மூடிக்கிட்டு ஊமையாய் இருப்பாளா? கை நிறையச் சம்பாதிக்கறான் என்பதற்காக அடிமையாக இருக்க முடியுமா?''

தரகர் வாயடைத்துப் போய் நின்றார்.

**– அ.சுஹைல் ரஹ்மான்**



# தடைகளைத்

சேவாலயா முரளிதரன்

பிரதாப் சந்திர மஜூம்தார் ஒரு கல்கத்தாவாசி. பகவான் இராம கிருஷ்ணரைத் தரிசித்தவர். பல ஆன்மிகச் சொற்பொழிவுகள் கல் கத்தாவில் செய்து வந்ததோடு பத்திரிகையும் நடத்தி வந்தார். கல்லூரி மாணவராக இருந்தபோது சுவாமி விவேகானந்தர் பலமுறை இவர் சொற்பொழிவுகளைக் கேட்டு இருக்கிறார். அவர் முன்னிலையில் ஒரு நாடகத்தில் துறவி வேடம் போட்டு சுவாமிஜி நடிக்கவும் செய்திருக்கிறார். இதற்குப் பல ஆண்டுகளுக்குப் பின்னால், நரேந்திரன் என்ற நிலை மாறி, உலகம் புகழும் வீரத் துறவியாக விவேகானந்தர் அமெரிக்காவில் ஜொலிக்க ஆரம்பித்தார்; பிரமிக்கவைக் கும் பல சொற்பொழிவுகளை ஆற்றினார். இந்த விஷயம் கொஞ்சம் கொஞ்சமாய் கல்கத்தா நகரவாசிகளை எட்டியது. தங்கள் ஊர்ப் பையன் அமெரிக்காவையே உலுக்கு கிறான் என்ற வகையில் கல்கத்தா நகரம் பெருமிதம் கொண்டது. ஆனால், மஜூம் தாரை மட்டும் பொறாமைத் தீ பற்றிக் கொண்டது. 'விவேகானந்தர் ஒரு துற வியா? அவர் துறவி வேடம் போட்டு நாடகத்தில் நடித்த ஒரு நடிகர்தான். அவருக்கு மத உண்மைகள் தெரிய நியாயம் இல்லை. அவர் சொல்லும் விஷயங்கள் இந்து மதத்துக்கு அப்பாற் பட்டவை. ஓர் இந்து துறவி கடல்தாண்டிச் செல்ல மாட்டான். இவர் எப்படி அமெரிக்கா போகலாம்?' என்று பிரசாரம் செய்ய ஆரம்பித்தார். மேலும், பத்திரிகை யில் விவேகானந்தரைக் கடுமையாகத் தாக்கி எழுதவும் செய்தார்.

துர்மதி படைத்தவருக்கு எப்போதும் கூட்டுச் சேருவது சுலபம். அமெரிக்காவில் அப்போது இந்தியாவைப் பற்றி ஒரு மட்டமான அபிப்ராயம்தான் இருந்தது.

# தகர்த்தெறி!

இந்தியத் தாய்மார்களே பெண் குழந்தைகளை முதலையின் வாயில் போட்டுவிடுவார்கள் என்றும், கோயில் ரதத்தின் சக்கரங்களில் தலையைக் கொடுத்து உயிரை மாய்த்துக்கொள்கிறவர்கள் என்றும், கணவன் இறந்தவுடன் மனைவியும் சிதையில் தள்ளப்படுவாள் என்றும் இதுதான் இந்து மதம்; இதுதான் இந்தியக் கலாசாரம் என்றும் நம்பி வந்தனர். ஆனால், விவேகானந்தரின் சொற்பொழிவுகளால் இந்தியக் கலாசாரத்தின் பெருமைகளை அமெரிக்கர்கள் உணர ஆரம்பித்தனர். இதைப் பொறுக்காத ஒரு கூட்டம், சுவாமிஜி எங்கு சென்றாலும் அவர் கூட்டங்களுக்குப் போய் கலாட்டா செய்து, அவரைப் பேசவிடாமல் கூச்சல் குழப்பம் செய்து வந்தது. அமெரிக்கப் பத்திரிகைகளில் விவேகானந்தரின் நடத்தையைச் சந்தேகிக்கும் வண்ணம் கட்டுரைகள் வெளியாயின.

விவேகானந்தரை, சில அமெரிக்கர்கள் அவரது சொற்பொழிவு கேட்க வருகையில் சந்திக்கும்போது, மனம் கிறங்கிப்போய் தமது வீட்டுக்கு வருமாறு அழைப்பார்கள். இதை அறிந்துகொண்ட அந்தத் துர்மதிக் கூட்டம், அந்த அமெரிக்கர்கள் இல்லத்தைத் தேடி, முதல்நாளே சென்று சுவாமிஜி நடத்தையைப் பற்றிச் சந்தேகங்களைக் கிளப்புவார்கள். அதன் பலன், குறித்த நாளில் சுவாமிஜி அவர்கள் வீட்டுக்குப் போகும்போது, அந்த வீடு பூட்டிக் கிடக்கும்.

ஆரம்ப நாட்களிலேயே இராமகிருஷ்ண பரமஹம்சர் விவேகானந்தருக்குச் செய்த போதனைகளுள் ஒன்று, 'ஒரு பெரிய பட்டத்து யானை கம்பீரமாக வீதி வழியே போகும்போது, சில சொறி நாய்கள், தெரு நாய்கள் யானையைப் பார்த்துக் குரைத்துக்கொண்டே பின்னால் செல்லும். யானை கம்பீரம் குறையாமல் முன்னால் சென்றுகொண்டே இருக்கும்.' இந்தக் கதையைச் சொல்லிவிட்டு அவர்

**ஓர் இந்து துறவி கடல் தாண்டிச் செல்ல மாட்டான். இவர் எப்படி அமெரிக்கா போகலாம்?**






விவேகானந்தரைப் பார்த்துக் கேட்டார், ''உன் மீது பொறாமை பிடித்துக் குற்றம் செய்பவர்களை நீ எப்படிப் பார்ப்பாய்?'' உடனே இளைஞர் விவேகானந்தர் மிகுந்த கோபத்தோடு, ''அவர்கள் சொறி நாய்கள்; வெறி நாய்கள்'' என்றார். ஆனால் ராம கிருஷ்ணரோ, ''வேண்டாமப்பா, அவர்களுக்கு உரிய மரியாதையைக் கொடுத்து விடு'' என்றார்.

**ம**காகவி பாரதி உயிருடன் இருந்த காலத்தில் அவரைப் புரிந்துகொண்ட மனிதர்கள் மிகக் குறைவு. அவரைக் குறை கூறிக்கொண்டு திரிந்த கூட்டம்தான் அதிகம். அந்த உலக மகாகவி மரணம் அடைந்தபோது, இறுதி ஊர்வலத்தில் கலந்துகொண்டவர்கள் பதினொரு பேர்தான் என்பார்கள்.

காந்திஜியைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். அவரைப் பற்றிய அவதூறுப் பிரசாரங்கள் இன்றும் ஓய்ந்தபாடில்லை. அகிம்சை சிறந்த ஆயுதமா என்று அகிம்சையால் சுதந்திரம் பெற்ற நம் நாட்டிலேயே இன்றும் பேசிக்கொண்டு இருக்கிறோம். மகாத்மாவின் மதம் பற்றிய, சாதி பற்றிய கருத்துக்கள் இன்றும் பலரின் விமர்சனத்துக்கு உள்ளாகின்றன. இது சம்பந்தமான அவதூறுகள் இன்னும் வந்துகொண்டே இருக்கின்றன. அவர் நடத்தையைப் பற்றிய சர்ச்சைகளும் எழுப்பப்படுகின்றன.

நூறு ஆண்டுகளுக்கு முன்னால் சுவாமி விவேகானந்தர், மகாகவி பாரதியார், மகாத்மா காந்திஜி மீது சொல்லப்பட்ட அவதூறுகள் இன்றும் பல தலைவர்கள் மீது சொல்லப்படலாம். 'கீழோர்க்கு அஞ்சும்' நிலைமை நமக்கு வந்துவிட்டால், நம்மை ஆட்டிப் படைப்பது எதிராளிகளுக்குச் சுலபமாகிவிடும். 'கீழோர்க்கு அஞ்சேல்' என்ற பாரதியின் வாக்கு இன்றைய நல்ல தலைவர்களுக்கு மிகமிக முக்கியமான அறிவுரை. 'தடையில்லாமல் நல்ல காரியம் எதையும் சாதித்துவிட முடியாது. இறுதி வரை உறுதியுடன் இருப்பவனே வெற்றி பெறுவான்' என்று விவேகானந்தர் சொன்னதையும்,

'சக்தி தொழிலே உலகமெனில்
சார்ந்த நமக்குச் சஞ்சலமேன்?'

என்று மகாகவி பாரதி சொன்னதையும் என்றும் நினைவில் கொள்வோம்.

**(சுவாசிப்போம்)**



# வட்டமேஜை



**ஒ**ரு தாயின் புண்பட்ட மனதைப் பிரதிபலித்த கதை 'கீறல்'!

**- கமலா ராஜசேகரன், பொள்ளாச்சி**

**வி**ல்லங்க விருதுகள் - 2007 ஒவ்வொன்றும் கனகச்சிதம்!

**- அனன்யா, திருச்சி**

## பதில் வருகிறதா பார்ப்போம்!

**மா**ர்க் வாங்கலையோ மார்க்-ஆசிரியர் பக்கம், தாராளமாக 99% மார்க் பெறும்.

**- அ.யாழினிபர்வதம், சென்னை**

**உ**ள்ளும் புறமும் மூலம் ஈராக்கின் நிலையை விவரித்த மருதன் கட்டுரை, இதயத்தை நெகிழ வைத்தது!

**- இந்திரன், நாகர்கோவில்**

**'வை**யத் தலைமை கொள்' தொடரை வாசிக்க வாசிக்க தன்னம்பிக்கை அதிகரிக்கிறது என்பதை நம்பிக்கையோடு கூறுகிறேன்.

**- எஸ்.சங்கர், திருப்பரங்குன்றம்**

### ஸ்பீட் போஸ்ட்

**வெ.**இறையன்புவின் புலியீர்ப்பு விசையைத் தாண்டி... புத்துணர்ச்சியூட்டிய படைப்பு!

**- வானவில் மூர்த்தி, கடலூர்**

**ரீ**மிக்ஸ் கொலைக்கு ஜெய பாஸ்கரன் சரியான சவுக்கடி கொடுத்துள்ளார்!

**- அனன்யா, திருச்சி**

**'ஏ**து வேதனையானது' என்ற கேள்விக்கு தராசின் பதில், அனைத்து அரசு அலுவலகங்களிலும் கறுப்பு எழுத்துக்களாய் பொறிக்கப்பட வேண்டியது!

**- கு.ப.இரகுநாதன், பூவிருந்தவல்லி**

**'வீ**ழ்த்தப்படுகிறார் விஜயகாந்த்' கட்டுரையில் ரகளை செய்துவிட்டீரே!

**- மஹிந்திரநாத் ராவ், சென்னை**

**மி**ரட்டப்படும் நீதிபதிகள் தலையங்கம் சூப்பர். நீதிபதிகளே பயப்படும் விவகாரத்தில் துணிச்சலாகத் தலையிட்டுள்ளீர்கள். ராஜகோபால் தரப்பிலிருந்து பதில் வருகிறதா, இல்லை உங்கள் ஆபீஸுக்கு ஆட்கள் வருகிறார்களா பார்ப்போம்!

**- பி.ஆர்.ஸ்ரீனிவாசன், சென்னை**

### திருத்தம்!

**க**டந்த இதழில் நடனக் கலைஞர் சுதாராணி ரகுபதியின் சி.டி. விமர்சனத்தில், சி.டி. கிடைக்கும் சூப்பர் ஆடியோவின் முகவரி மாறிவிட்டது. சரியான முகவரி :

சூப்பர் ஆடியோ,
கேரக்ஸ் சென்டர் இரண்டாம் தளம்,
713, அண்ணா சாலை, சென்னை - 6

# நீங்கள் கேட்டவை
## தராசு

● கீதா முருகானந்தம், திருவைகாவூர்

? வரும் தேர்தலில் ஜெயலலிதாவுக்கு மக்கள் ஆதரவு எப்படி இருக்கும்?

! மோடி, ஜனவரி 14ஆம் தேதி போயஸ் தோட்டத்துக்கு வந்துபோன பின், அவர் அமைக்கும் வியூகங்களைப் பொருத்திருக்கும்.

● சி.மகேஷ், திருச்சி - 17

? குவாஹாதி மிருகக்காட்சி சாலையில் நடந்த கோரம் எதை உணர்த்துகிறது?

! வரிகளை உதிர்த்தாலும், கூண்டில் அடைபட்டாலும் புலியின் தன்மை மாறாது என்பதை. இதனை உணராத முட்டாள்தனம் அதற்குரிய அபராதத்தை அளித்தாக வேண்டும் என்பதை.

● மங்கையர்க்கரசி, சென்னை - 94

? நரேந்திர மோடியின் ஹேட்ரிக் வெற்றி சொல்லும் செய்தி என்ன...?

! சீரான நிர்வாகம், ஊழலற்ற ஆட்சி, கிராமப்புற மக்களின் நல்வாழ்வுக்கான திட்டங்கள் அமலாக்கம் என்ற 'ஹேட்ரிக்', மத அடிப்படைவாதம் என்ற 'சக்கிங்'கை மறந்து, மன்னித்துவிடச் செய்தன என்பதே.

● வே.நா.கதிர்வேல், வேலூர்

? போலிச் சாமியார்களிடம் பெண்கள் ஏமாறுவது தொடர்கதையாகிவிட்டதே? இதற்குக் காரணம் அந்தச் சாமியார்களின் சாகசத் தந்திரமா? அல்லது ஏமாறும் பெண்களின் வடிகட்டிய முட்டாள்தனமா?

! வாழ்க்கையில் ஏதோ ஒரு பிரச்னை அல்லது ஒரு பெரிய ஏமாற்றத்தைச் சந்திப்பவர்கள், ஆறுதல் தேடி சாமியாரிடம் செல்கிறார்கள். சாமியார் இந்தப் பலவீனத்தைப் பயன்படுத்தி அவர்களை ஏமாற்றுகிறார். தன்னம்பிக்கையும் திடச் சித்தமும் உடையவர்கள், ஏமாற்றம் அல்லது பிரச்னையுடன் போராடி வெற்றி காண வழி தேடுவார்களேயன்றி, ஆறுதல் தேடிப் போகமாட்டார்கள்.



* ஃபுல்டைம் உணர்ந்து...

● வசீகரன், தேனாம்பேட்டை

? கோபமாக இருக்கும்போது செய்யக் கூடாதது எது?

! 1.முடிவு எடுக்கக்கூடாது 2. மற்றவர்களைப் பற்றி அபிப்பிராயம் கூறக் கூடாது 3. முக்கியமாக மேலும் மேலும் குமைந்து கோபப்படக் கூடாது.

● ஜே.வி.ஜே.கண்ணன், திருச்சி - 8

? எம்.ஜி.ஆர். நினைவு நாளன்று, மதுரையில் அ.தி.மு.க. - தே.மு.தி.க. இடையே ஏற்பட்ட மோதலுக்கு, 'தி.மு.க.வின் சதி வேலையே காரணம்' என்று விஜயகாந்த் கூறுகிறாரே?

! 'பார்ட் டைம் அரசியல்வாதி'ன்னு ஒரு குற்றச்சாட்டு காத்துவாக்குல அடி பட்டதில்லே... அதான் ரோஷம் வந்து ஃபுல் டைம் பாலிடிஷியன் மாதிரி பேசியிருக்கார்!

● ச.நாகரத்தினம், திருப்பூர்

**? 'ஒரு பதவிக்குத் தகுதியில்லை என்று ஒதுக்கிய பிறகு, மற்றொரு பதவிக்கு மட்டும் எப்படித் தகுதி வரும்...? எனவே நான் ஓய்வு பெறுவதில் உறுதியாக இருக்கிறேன்' என்று கிரண்பேடி பேசுவது குறித்து...?**

! நமக்கு நியாயம் கிடைக்கவில்லை என்பதால் தார்மிகக் கோபத்துடன் விருப்ப ஓய்வு பெற்றவர், அதற்குச் சரியானதொரு வாதத்தையும் முன் வைத்திருக்கிறார். இனி சமுதாய நியாயத்துக்காக அவர் உழைத்துப் பாடுபட்டால், பதவி உயர்வைக் காட்டிலும் உன்னத நிலைக்குப் போக வாய்ப்பிருக்கிறது.

● வெ.ராம்குமார், வேலூர் ★

**? 'அரசு நடத்த வேண்டியதையெல்லாம் தனியார் நடத்துகின்றனர். தனியார் நடத்துவதையெல்லாம் அரசு நடத்தி வருகிறது' என்கிறாரே ராமதாஸ்?**

! வெகுகாலம் முன்பே ராஜாஜி சுதந்திரா கட்சி தொடங்கக் காரணமாயிருந்த பல விஷயங்களுள் இதுவும் ஒன்று. அந்நாளில் அவர் எழுதியவற்றைப் படித்தால், ராமதாஸ் மேலும் பல அம்சங்களில் விழிப்புணர்ச்சி பெறுவார்.

● இரா. சக்கரபாணி, மதுரை ❑

**? 'அரசியலில் நீதி, நேர்மை, நியாயம், ஒழுக்கம், பண்பாடு ஆகியவை நிலைத்திட பாடுபடுவோம்' என்று எம்.ஜி.ஆர். நினைவிடத்தில் ஜெயலலிதா உறுதிமொழி எடுத்துள்ளது எதைக் காட்டுகிறது?**

! 'ஆகக்கூடி, இத்தனை நாளாக இந்த உறுதிப்பாடு இல்லாமல்தானே இருந்தார்?' என்று கேட்க வைக்கிறது. இப்போதாவது உறுதிமொழி எடுத்துக்கொண்டாரே என்று சந்தோஷப்படத் தோன்றுகிறது. பேச்சோடு நில்லாமல், காரியத்தில் காட்

# பா.ஜ.க. வெற்றிகள் ஆட்சி மாற்றத்துக்கு அறிகுறியா?

✱ வியூகங்களைப் பொறுத்து...



✱ விழிப்புணர்ச்சி கருதி...



✱ 'சக்கிங்' மறந்து...



டப்பட வேண்டுமே என்ற கவலையும் உருவாகிறது.

● எம்.சண்முகம்,
கொங்கணாபுரம்

**? ஈரோடு - திருப்பூர் புதிய மாநகராட்சிகளாவது குறித்து?**

! மாநகராட்சி ஆவது பெரிய விஷயமல்ல. மா.ஆட்சி நகரமாவதே முக்கியம் என்று நினைவூட்டி வாழ்த்தி வரவேற்போம்.

● ஆர்.மாதவராமன்,
கிருஷ்ணகிரி

**? விரதம் அனுஷ்டிக்கும் சபரிமலை அய்யப்ப பக்தர்கள், புகைபிடிப்பதை தராசாரால் ஜீரணிக்க முடிகிறதா...?**

! நான் ஜீரணிப்பது இருக்கட்டும்; அவரவர் மனசாட்சி எப்படி ஜீரணிக்க முடியும்? மன அடக்கம், புலனடக்கம் காண முடியாதவர்கள் விரதம் மேற்கொள்ளாமல் இருப்பதே நல்லது.



✱ வாதம் முன்வைத்து...



✱ கற்பனை கலந்து...

● கு.கணேசன், பனங்கோட்டூர்

**? 'காந்தியைக் கொன்றவரை இந்த நாடு மன்னித்துவிட்டது. இந்திராவைக் கொன்றவரை மன்னித்ததுடன், அந்த இனத்தவர் ஒருவரைப் பிரதமராகவும் ஆக்கியிருக்கிறது. ஆனால், ராஜீவைக் கொன்றவர்களை மட்டும் பழிவாங்கத் துடிப்பது ஏன்?' என்று கேட்கிறாரே திருமாவளவன்?**

! ஒருவரை மன்னிப்பது; இன்னொருவரைப் பழிவாங்கத் துடிப்பது என்ற பேச்சுக்கே இடமில்லை. செய்த குற்றத்துக்கு உரிய தண்டனையை, சட்டப்படி குற்றவாளிகள் அனுபவித்தே தீர வேண்டும். இதில் கருணை காட்டுவது தான் தப்பு. அதேசமயம், ஒரு குறிப்பிட்ட மதத்தைச் சேர்ந்த அனைவரையுமே குற்றவாளிகளாகக் கருத முடியாது. திருமாவளவன் வளமான கற்பனைத் திறனுடன் பேசி, திருகுமாவளவன் ஆகிறார்.

● எம்.ராஜேந்திரன், லால்குடி

**? சின்னத்திரையில் டான்ஸ் நிகழ்ச்சிகளுக்கு (மஸ்தானா மஸ்தானா, மானாட மயிலாட, ஜோடி நம்பர் 1) அதிக முக்கியத்துவம் தரப் படுகிறதே?**

! கலாசார சீரழிவுக்கான ஃபாஸ்ட் டிராக்!

● ஜோ.ஜெயக்குமார்,
நாட்டரசன்கோட்டை

**? நந்திகிராம் மக்களிடம் மன்னிப்புக் கேட்ட புத்ததேவின் செயல் பற்றி...?**

! Better late than never!

● எம்.சம்பத்,
வேலாயுதம்பாளையம்

**? குஜராத், ஹிமாச்சல பிரதேசம் ஆகிய மாநிலங்களில் பா.ஜ.க.வின் வெற்றியை அடுத்த ஆட்சி மாற்றத்துக்கான அறிகுறி என்று எடுத்துக் கொள்ளலாமா?**

! பா.ஜ.க. வெற்றி என்பதைவிட நல்லாட்சி (குஜராத்) வெற்றி பெறுகிறது என்றும், மோசமான ஆட்சி (இ.பி.) தோல்வி அடைகிறது என்றும் எடுத்துக் கொள்ளலாம். எனவே, காங்கிரஸ் விழிப்படையவில்லையென்றால், இன்றைய அறிகுறி நாளைக்கு நிஜமாகிவிடும்.

● ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்

**? ஆஸ்திரேலிய தொடரில் நமது இந்திய அணியினர் கலக்குவார்களா?**

! 'கலக்குவது' என்பது வெற்றியில் மட்டுமல்ல; முயற்சியில் இருக்கிறது. தொடக்கத்தில் காண்பிக்கப்படும் சூரத்தனம் நம்மிடம் இறுதிவரை இல்லாது போகிறது. முதல் டெஸ்டில் அடி வாங்கிச் சுருண்டது இதனால்தான். வெற்றி பெறாவிட்டாலும், வெற்றி பெற நன்று முயன்றாலே போதும்.

❒ ரூ.100/- பரிசு பெறுபவர்:

இரா.சக்கரபாணி, மதுரை

✱ ரூ.50/- பரிசு பெறுபவர்:

வெ.ராம்குமார், வேலூர்

# அரசிக்கு எதிராக ஆர்ப்பாட்டம்!

'ரௌத்திரம் பழகு!' என்ற பாரதியின் ஒற்றை வரியை வேதவாக்காகக் கொண்டு சமூக அவலங்களுக்கு எதிராகச் சிலிர்த்தெழத் தங்களைத் தயார்படுத்திக் கொண்டு வருகின்றனர் 'ஊருக்கு நூறு பேர்' அமைப்பினர்.

''மனித மனத்தில் அன்பு, அகிம்சை, பாசம், நேசத்துடன் வக்ரமும் இருப்பதை மறுக்கவில்லை. ஆனால், சவ நிலையில் உறைந்து கிடக்கும் அந்த வக்ர நினைவுகளை மட்டும் தட்டித் தட்டி உசுப்பி உயிர் கொடுத்து விஸ்வரூபம் எடுக்க வைப்பதுதான் இன்றைய தொலைக்காட்சித் தொடர்களின் முக்கிய நோக்கமாக இருக்கிறது. இந்த அவலத்தை மாற்றுவதற்கான முதற்கட்ட முயற்சியாக நடிகை ராதிகாவின் 'அரசி' தொடருக்கு எதிரான கடுமையான கண்டன ஆர்ப்பாட்டத்தை நடத்தவிருக்கிறோம்!'' என்று குமுறுகிறார் இக்குழுவின் அமைப்பாளர், டி.எஸ். ரவீந்திரதாஸ்.



* ரவீந்திரதாஸ்

''அதென்ன அரசிக்கு எதிராக மட்டும் ஆர்ப்பாட்டம்?'' என்றால், ''இப்போது ஒளிபரப்பாகும் தொடர்களிலேயே மிகவும் மோசமான தொடர் அரசிதான்! குடும்பம், சமூகம் என்ற அமைப்பினை சீர்குலைக்கும் விதமாக தொடர்ந்து நச்சுவிதை பரப்பிவரும் செயலை உடனடியாக அரசி திருத்திக்கொள்ள வேண்டும்!'' என்கிறார்.

''உங்கள் கண்டனத்துக்கு அரசி கட்டுப்படுவாரா?'' என்றால், ''கட்டுப்பட வேண்டும்! சமூகத்தின் மீது அக்கறைகொண்ட பெண்மணி அவர் என்று நம்புகிறேன்! தவிரவும் இந்தக் கண்டனம் எங்கள் அமைப்பின் கண்டனமல்ல; நாங்கள் நட்சத்திர ஓட்டலிலோ, குளிரூட்டப்பட்ட அரங்கங்களிலோ கூடி அமர்ந்து அறிவிக்கப் போவதில்லை.



பொது மக்கள் கூடும் இடங்களில் மக்களிடமே கருத்தைக் கேட்டறிந்து, மக்களின் குரலாகவே இந்தக் கண்டனத்தை பதிவு செய்ய இருக்கிறோம்'' என்கிறார்.

''எங்கெல்லாம் சமூக அமைதிக்கும், மண்ணின் மாண்புக்கும் ஊறு விளையும் செயல்கள் நடக்கிறதோ, அங்கெல்லாம் அந்தக் குற்றங்களுக்கு எதிராக ஒரு நூறு பேர் திரண்டு வெகுண்டெழ வேண்டும் என்பதுதான் எங்கள் அமைப்பின் நோக்கம்'' என்கிறார் ரவீந்திரதாஸ்.

- எம்.ஆர்.இராஜேந்திரன்



* 'அரசி' ராதிகா

சுதா சேஷய்யன்

# வேதஸார நல்முத்து!

மீனுக்குக் கண் இமைகள் கிடையாது. அம்பாளுடைய கண்கள் மீன்களைப் போன்ற கண்கள். ஆசார்யரே இன்னொரு இடத்தில் பாடுகிறார் - அம்பாள் என்ன பண்ணுகிறாள் என்றால், அவள் ஜகத் ஸ்வரூபமாக இருக்கக்கூடியவள்தானே, ஆதலால், ஜகத்தில் இருக்கக்கூடிய எல்லா விஷயங்களையும் பார்த்துக்கொண்டே இருக்கிறாள். ஒரு பொய்கை இருக்கிறது - பெரிய குளம். அந்தக் குளத்தில் உள்ள மீன்கள் என்ன பண்ணினவாம்? துள்ளிக் குதித்தனவாம். அப்படிக் குதித்த மீன்கள் மீண்டும் தண்ணீருக்குள் விழுந்து அடியில் போய் விட்டன - மேலே வரவே இல்லை...! ஏன் மேலே வரவில்லை என்பதற்கு அழகான காரணம் சொல்கிறார் ஆசார்யர் -

### அச்சம் கொண்ட மீன்கள்!

மேலே வந்து ஒரு தடவை எட்டிப் பார்த்த மீன்கள் அம்பாளுடைய கண்களைப் பார்த்தன - அவளுடைய கண்கள் கெண்டை மீன்களைப் போன்று இருந்தன. அவற்றில் கருவிழிகள் வண்டுகளைப் போன்று இருந்தன. அந்த விழிகள் அப்படியும் இப்படியும் அசைந்து 'எங்கே என் பக்தர்கள்? எங்கே என் பக்தர்கள்?' என்று அலைபாய்ந்து தேடுவதை இந்தக் குளத்து மீன்கள் பார்த்தன. அம்பாளுடைய காதோரம் வரை நீண்ட அந்த விழிகளின் சலனத்தைப் பார்த்து, அந்த விழிகளை மீன்களாக எண்ணிக்கொண்டன. 'ஓஹோ, அந்த மீன்கள், அம்பாளிடம் போய் நம்மைப் பற்றி புகார் சொல்கின்றன!' என்று நினைத்துவிட்டன!

எப்போதுமே நாம் தப்பு பண்ணி விட்டால், வேறு யாரேனும் ஏதாவது சாதாரணமாகப் பேசினால்கூட நம்மைப் பற்றித்தான் பேசுகிறார்களோ என்று ஒரு நினைப்பு வரும்! நாம் பண்ணிய தப்பு வெளியே தெரிந்து போயிற்றோ என்று குறுகுறுப்பு ஏற்படும். அந்த மாதிரி, இந்த மீன்களுக்கு என்ன தோன்றியதாம், 'நாமும் அம்பாளுடைய கண்களின் வடிவத்தில் இருப்பதால், அவற்றுடன் நாம் போட்டிக்கு வந்துவிட்டோம் என்பதாக அம்பாளுடைய கண்களாகிற மீன்கள் அவளிடம் புகார் சொல்கின்றனவோ?' என்று சந்தேகம் வந்துவிட்டதாம்! அப்படி எண்ணிக்கொண்டு, அம்பாள் கோபித்துக் கொள்ளப்போகிறாளே என்று பயந்து கொண்டு, அப்படியே தண்ணிக்குள்ளே போய் ஒளிந்து கொண்டனவாம் அந்த மீன்கள்!

அப்படி சலன்மீனாபலோசனி என்று அந்த விழிகள் அலைந்துகொண்டேயிருந்தாலும், அவை நிகரற்ற அழகான கண்கள்! எங்கெல்லாம் அம்பாள் குடிகொண்டிருக்கிறாளோ அங்கெல்லாம் அதே விழி அழகுடன் இருக்கிறாள். ஸஹஸ்ர அக்ஷங்களைக் (ஆயிரம் விழிகளை) கொண்டவளாக அவற்றைச் சிமிட்டாதவளாக இருக்கிறாள். இந்த உலகத்தைக் காப்பாற்றவேண்டும் என்பதற்காக அவள் அப்படி இருக்கிறாள்.

இந்த விஷயத்தை எடுத்துக்கொண்டு ஆசார்யர் சிந்தனையை வளர்த்துக் கொண்டே போகிறார். அம்பாள் எப்படி

நமக்காக கண் இமைக்காமல் இருக்கிறாள் - நமக்கு இருட்டு வரக்கூடாது என்பதற்காக, உலகில் பிரளயம் வந்துவிடக் கூடாது என்பதற்காக கண்களைச் சிமிட்டாமல் இருக்கிறாள் என்று விவரிக்கிறார்.

## ஸ்ரீ மாதாவும் வேதமாதாவும்

இப்படி **ஆ ப்ரம்ம கீட ஜனனி**யாக இருப்பவள் இந்த உலகத்தை சிருஷ்டி செய்தவள். **நிஜ ஆக்ஞா ரூப நிகமா** என்பது இன்னொரு திருநாமம். நிகமா என்றால் வேதம். வேதாந்த தேசிகருக்கே நிகமாந்த தேசிகர் என்று ஒரு பெயர் உண்டு. வேதங்களின் ஸ்வரூபமாக, தன்னுடைய ஆக்ஞையினால் எந்த வேதங்களை உருவாக்கினாளோ, அந்த வேதங்களின் ஸ்வரூபமாக இருக்கக் கூடியவள்; வேதத்தின் பொருளாகவும் இருக்கக்கூடியவள் அம்பாள்.

மஹாவிஷ்ணுவுக்கும் இதைச் சொல்வதுண்டு. வேதத்தின் ஸ்வரூபம் என்று சொல்வதுண்டு. மஹாவிஷ்ணு ஸ்வரூபமும் அம்பாள் நாராயணியின் ஸ்வரூபமும் ஒன்று என்று சொல்வதால்தான் வேதம், வேதத்தின் பொருள் ஆகியன இருவருக்கும் உரிய குண இயல்புகளாகின்றன. தர்மி - தர்மம் என்று பரபிரும்ம ஸ்வரூபம் பிரிந்தது என்று பார்த்தோம். தர்மி என்பதே ஒரு பக்கம் விஷ்ணுவாகவும் ஒரு பக்கம் அம்பாளாகவும் உள்ளதைப் பார்த்தோம். ஆகவேதான் பத்மநாப சகோதரியாக இருக்கக்கூடியவள், அவனைப் போலவே நிஜ ஆக்ஞா ரூப நிகமாவாகவும் (வேதங்களின் ஸ்வரூபமாக) இருக்கிறாள்.

## அம்பாளின் பாத தூளி

வேதமாதாவுடன் தொடர்புடைய இன்னொரு திருநாமம் **ஸ்ருதி ஸீமந்த ஸிந்தூரீ க்ருத பாதாப்ஜ தூளிகா.**

அம்பாளுடைய காலடியில் வந்து வணங்கக்கூடிய வேதமாதாவின் தலையில் அந்தக் கால் படுகிறது. வேதா மாதாவானவள் தன்னுடைய தலை வகிட்டில் சிந்தூரம் இட்டுக் கொண்டிருக்கிறாள். அம்பாளுடைய பாதத்தில் உள்ள தூளி (தூசு) இருக்கிறதே, அந்த பாத தூளிதான் வேதமாதாவின் தலைவகிட்டில் சிந்தூரமாக இருக்கிறது.

ஸ்ருதி என்பது வேதத்தைக் குறிக்கும். ஸீமந்தம் என்று தலைவகிடுக்குப் பெயர். ஆசார்யர் அம்பாளுடைய ஸீமந்தம் (தலைவகிடு) குறித்துப் பாடியிருக்கிறார்.

ஸீமா என்றால் எல்லை. ஒரு



**சலன்மீனாபலோசனி என்று அந்த விழிகள் அலைந்து கொண்டேயிருந்தாலும், அவை நிகரற்ற அழகான கண்கள்! எங்கெல்லாம் அம்பாள் குடிகொண்டிருக்கிறாளோ அங்கெல்லாம் அதே விழி அழகுடன் இருக்கிறாள்.**

பெண்ணின் உச்சி வகிடு என்று சொல்கிறோமே அது அவளுடைய தலை உயரத்தின் எல்லையில் ஆரம்பித்து கடைசி வரை நீள்கிறது - அந்த ஸீம - எல்லையின் - அந்தம் அல்லது முடிவு ஸீமந்தம் என்று அழைக்கப்படுகிறது.

அம்பாளுடைய பாதங்களிலிருந்து வரக்கூடிய தூசு, வேத மாதாவின் ஸீம அந்தத்தில் சிந்தூரமாக (குங்குமமாக) மாறியிருக்கிறது!

எந்த வேதங்களை நிஜ ஆக்ஞா ரூப நிகமாவாக அம்பாள் சிருஷ்டித்தாளோ, அந்த வேதங்கள் வந்து அம்பாளை நமஸ்காரம் செய்துகொண்டிருக்கின்றன.

## சிப்பிக்குள் முத்து

இதைப் பற்றி இன்னொரு அழகான திருநாமமும் இருக்கிறது: **ஸகல ஆகம ஸந்தோஹ சுக்தி ஸம்புட மௌக்திகா.** வேதங்கள், அவற்றின் அங்கங்கள், அவற்றிலிருந்து வரக்கூடிய ஆகமங்கள், புராணங்கள் - இவையெல்லாம் ஒரு பெரிய கூட்டம். இவையெல்லாம் சேர்ந்து ஒரு சம்புடமாக இருக்கின்றன! சம்புடம் என்பது அழுந்த மூடக்கூடிய மூடியை உடைய ஒரு பெரிய டப்பா. தென் மாவட்டங்களில் புழக்கத்திலிருக்கக்கூடிய ஒரு பாத்திரத்தின் பெயர் இது. வட மாவட்டங்களில் அவ்வளவாக இந்தப் பெயர் புழங்காது.

இந்தச் சம்புடம் ஒரு முத்துச் சிப்பி மாதிரி என்று வைத்துக்கொள்வோம். அந்தப் பெரிய முத்துச் சிப்பிக்குள் இருக்கக்கூடியது என்னவாக இருக்கும்...? வேத, ஆகமங்களின் கூட்டம் சம்புடம் என்றால், அதனுள் முத்தாக இருக்கக்கூடியவள் அம்பாள்தான்!

## நீலகண்ட தீக்ஷிதர்

நீலகண்ட தீக்ஷிதர் அம்பாளைப் பார்த்து ஆனந்த ஸாகரஸ்தவம் பாடினார். மிகப் பெரிய அம்பாள் உபாஸகராக இருந்தவர் அவர். யாருமே சொல்ல முடியாத, யாருக்குமே தெரியாத பல விஷயங்கள் அவருக்குத் தெரிந்திருந்தன. ஆனால், அதுவே வாழ்க்கையில் அவருக்குப் பெரிய பிரச்னையை ஏற்படுத்தியது. அப்பைய்ய தீக்ஷிதரின்; பரம்பரையில் வந்தவர் நீலகண்ட தீக்ஷிதர்; அவருடைய சகோதரருக்குப் பேரன் முறை.

குலச் சொத்தைப் பிரித்துக் கொடுக்கிற காலகட்டத்தில், அப்பைய்ய தீக்ஷிதரால் இவருக்கு எதுவும் கொடுக்க முடியாத சூழ்நிலை வந்தது. நடைமுறைச் சிக்கல் அந்தக் குடும்பத்தில் உண்டாயிற்று.

அப்போது அந்தக் குழந்தைக்குப் (நீலகண்ட தீக்ஷிதருக்கு) பதினாலு வயது. 'பணம் கொடுப்பதா? பொருள் கொடுப்பதா? ஏதாவது கொடுத்து அனுப்ப வேண்டுமே இந்தக் குழந்தைக்கு' என்று அப்பைய்ய தீக்ஷிதர் யோசித்தார். அப்போது அந்தக் குழந்தை அவரிடம் வந்து கேட்கிறது - ''எனக்குச் சொத்து, பணம் எதுவும் வேண்டாம். உங்களிடம் உள்ள ஞானம், வித்தை இவையெல்லாம் கொடுங்கள் போதும்'' என்கிறது. அப்பைய்ய தீக்ஷிதரிடம் பாடம் கேட்டு, உபதேசம் கேட்டு மிகப் பெரிய பண்டிதனாக, மிகப் பெரிய அம்பாள் உபாஸகராகத் திகழ்ந்தவர் நீலகண்ட தீக்ஷிதர். அவருக்கு ஒரு சோதனை வந்தது.

(வளரும்)



காயத்ரி வேங்கடராகவன்



சுருதி ஸாகர்

மாலதி சந்திரசேகரன்

குடை ராட்டினச் சுழற்சியாக இன்னொரு சீஸன் ரசிகர்களைக் கிறுகிறுக்க வைத்திருக்கிறது. அதே கலைஞர்கள், ஏறத்தாழ அதே ரசிகர்கள் - பழம்பெரும் சபாக்களுடன் புத்தம்புது சங்கங்கள், சங்கமங்களிலும் மூச்சிறைக்க வட்டமடித்துவிட்டு, மெள்ளத் தங்கள் இடங்களுக்குத் திரும்பிக்கொண்டிருக்கிறார்கள். இந்தச் சுழற்சியில் கண்டும் கேட்டும் களித்தவை பலப்பல என்றாலும், ஏதோவொரு காரணத்தால் மனத்தில் தங்கிவிட்ட சில அனுபவங்கள் மட்டும் இங்கே:

### உருக்கம்

உணர்ச்சி பாவத்தை நுணுக்கமாகவும் ஆழமாகவும் வெளிப்படுத்தி காயத்ரி வேங்கடராகவன் பாடிய 'சிவகாம சுந்தரி' கீர்த்தனை. 'கேளாயோ என் முறைகள்...?' என்று விண்ணப்பித்த தொனியில் சொல்லும் இசையும் உணர்வும் ஒன்றாகி சிவகாமசுந்தரியிடம் உரிமை கொண்டாடிய உருக்கம்.

*(மியூசிக் அகாடமி)*

### அதிசயம்

கிருஷ்ணர் வேஷம் போட்டுக்கொண்டு கல்லூரி டிராமாவில் நடிக்கும் வயதே உள்ள சுருதி ஸாகரின் புல்லாங்குழலிசை. அதில் கனிந்து சொட்டும் பாவத்தைக் கையில் ஏந்திக்கொண்டுவிடலாம் போலிருக்கிறது! பாடல்களின் வார்த்தைகளை, மூச்செடுக்கும் சௌகரியத்துக்கு ஏற்ப மாற்றி மழுங்கடிக்காமல் கனை கனையாக வாய்ப்பாட்டு ஸ்டைலில் வழங்கிடும் இவருடைய பாணி மற்றொரு ப்ளஸ். (பாலசாயியிடம் பயின்றவர். தற்போது இவர் குரு, சாஹித்யத்துக்கு மிகுந்த முக்கியத்துவம் தரும் டி.கே.ஜெயராமனின் பாசறையில் பயின்ற டாக்டர் சுந்தர்).

*(ரமண கேந்திரா)*

### அமைதி

மாலா சந்திரசேகருடைய வாசிப்பில் குடியேறியிருக்கும் முதிர்ச்சி - அதன் இணையான அமைதி. துரித காலம் வாசித்தாலும் சரி, கணக்கு வழக்கு வாசித்தாலும் சரி, இந்த அமைதி அவருடைய குழலிசையில் கூடவே வருடியபடி வருகிறது; கம்பீரம் தருகிறது.



# நினைவில்


நர்த்தகி நடராஜ்


சஞ்சய் சுப்ரமண்யம்


விஜய் சிவா

# தும்புரு

# நிற்பவை!

### சுவாரஸ்யம்

முதல் பாதி கச்சேரியில் அட்டகாசம், ஆர்ப்பாட்டம், எட்ரா ஒட்டம்! என்று பாடிய சஞ்சய் சுப்ரமண்யம், இரண்டாவது பாதியில் பாதை மாறி மெலடிக்கு முக்கியத்துவம் கொடுத்துத் தாலாட்டியது சுவாரஸ்யம். முதல் பாதியின் நாராயணி ஜிக் ஸா பஸில்; கல்யாணி குறுக்கெழுத்துப் புதிர்! தனியாவர்த்தனத்துக்குப் பிறகு வந்த ஆபேரி (பீம்பிளாஸ்?) தளும்பாத குடம்.

*(மியூசிக் அகாடமி)*

### சமர்ப்பணம்

'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்' என்ற திருநாவுக்கரசர் பதிகத்துக்கு நர்த்தகி நடராஜ் அமைத்து ஆடிய நடனம், பாரத தேசத்து பக்தி இயக்கத்துக்கான சமர்ப்பணம். திருவாரூர் கோயிலழகையும், தியாகேசரின் ரூப வர்ணனையையும் பெருமிதம் தோய்ந்த பக்தியால் தீட்டிக் கொண்டே வந்தவர், 'தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே' என்று இறுதியில் கரம் கூப்பி நிலம் படிந்தபோது, அவரது அங்கங்களுடன் அவருடைய ஜடையலங்காரத்தின் காகிதப் பூக்களும் முத்துக்களும் சிவப்புக் கற்களும்கூட சிவனோடு ஐக்கியமாயின.

*(பிரம்ம கான சபா)*

### அற்புதம்

ஓரிரு மீட்டுகளில் சாருகேசியை உருக்கி வார்த்து அநியாயத்துக்குக் கண் கலங்க வைத்த ஜெயந்தியின் வீணை வாசிப்பு. இவர் விரல்கள் வீணையை மீட்டினாலும் இதயம்தான் வாத்தியத்துக்கு ஆணையிடுகிறது. சாருகேசி ராகம் தானம் பல்லவியில் மயிலை 'ஜிவ்' வென்று பறந்து வரவைத்து, முருகனை அதன் மேல் அமர்த்தி, ஆடவிட்டு அழகு பார்த்து... திக்குமுக்காட வைத்துவிட்டார்.

*(நாரத கான சபா)*

### ஆனந்தம்

'மஹாயோக பீடே' என்று தொடங்கி, விட்டலனை வர்ணிக்கும் பாண்டுரங்க அஷ்டகத்தின் ஓர் அடியை விருத்தமாகப் பாடிக்கொண்டே வந்து, இடைவெளி அனுமதிக்காமல் 'பாரே பாண்டு ரங்கா...' என்று அபங்க கீதத்தை ஆனந்தமாக ஆரம்பித்தார் விஜய் சிவா. கையில் சிறிய ஜால்ரா ஏந்தி, தட்டியபடி கண்கள் மூடிப் பாடியவர், 'நாராயண, நாராயண' என்று இறுதியில் நிறுத்திய பிறகும், நாதமும் நாமமும் செவிகளில் தொடர்ந்தன. அன்று வைகுண்ட ஏகாதேசி!

*(கலாரசனா)*

# கலகம் பிறந்தது எனக்காக!

**பா**ரதிய ஜனதா கட்சியின் பிரதம வேட்பாளராக அறிவிக்கப்பட்டிருக்கிறார் எல்.கே.அத்வானி. குஜராத், இமாசலப் பிரதேச பி.ஜே.பி.யின் தேர்தல் வெற்றிகள் அத்வானிக்கு அமோகமான உற்சாகத்தை அளித்திருக்கின்றன.

சுதந்திரத்துக்குச் சிறிது காலம் முன்பு பாகிஸ்தான் பகுதியில் இருந்து இந்தியாவுக்குள் அடியெடுத்து வைத்த குடும்பம் அத்வானியினுடையது. இளம் வயதிலேயே ராஷ்ட்ரிய ஸ்வயம் சேவக் என்கிற ஆர்.எஸ்.எஸ்.ஸில் தம்மை இணைத்துக் கொண்டார்.

ஆர்.எஸ்.எஸ்.ஸின் சித்தாந்தங்கள், ஒழுங்குகள், கொள்கைகள் மீது அத்தனை பிடிப்பு அத்வானிக்கு. கூடுதலாக, வசீகரிக்கும் பேச்சாற்றல். பம்பரமாகக் களப்பணியாற்றும் திறன். தேவையான அளவுக்கு ஆக்ரோஷம். தேவைக்கு மீறிய உழைப்பு. இது போதாதா? பதவிகள் அவரைத் தேடத் தொடங்கின. 1942ல் கராச்சி கிளைச் செயலாளராகத் தேர்வு செய்யப்பட்டார்.

போராட்டம், இந்துத்வா இயக்கம் என்று இயங்கிக்கொண்டிருந்தவர், தமக்கான களம் அரசியல் என்று முடிவு செய்துவிட்டதால் தாம் படித்த சட்டப்படிப்பை அப்படியே சட்டத்தில் மாட்டி வைத்துவிட்டு, பாரதிய ஜனசங்கத்தில் தம்மை இணைத்துக்கொண்டார். அதுவே பின்னர் ஜனதா கட்சியாக உருமாறியது.

நாளடைவில் மாநிலங்களவைக்குத் தேர்வு செய்யப்பட்ட அத்வானி, கட்சியின் நம்பிக்கை நட்சத்திரமாக ஜொலித்துக் கொண்டிருந்தார். பொது வாழ்க்கை என்றால் பதவி மட்டுமா கிடைக்கும்? ம்ஹூம் அழையா விருந்தாளியாக, சிறைவாசமும் வந்தது. எமர்ஜென்சியின்போது மிசாவில் கைதாகி பெங்களூர் சிறையில் அடைக்கப்பட்டார்.

ஆர்.முத்துக்குமார்

1980ல் வாஜ்பாய் மற்றும் அத்வானி தலைமையில் பாரதிய ஜனதா கட்சி உருவானது. ஆரம்பித்த புதிதில் கட்சி போணியாகாது என்றுதான் எல்லோரும் நினைத்தார்கள். அதுதான் உண்மையும்கூட. 1984ல் நடந்த தேர்தலில் வெறும் இரண்டே இடங்களைக் கைப்பற்றியது பா.ஜ.க. அதற்காக அப்படியே விட்டுவிட முடியுமா என்ன? யோசித்தார் அத்வானி.

'பாரதிய ஜனதா கட்சி சுபிட்சமடைய வேண்டுமானால், ராம கோஷத்தை எழுப்புவதைத் தவிர வேறு வழியில்லை. இடிப்போம் பாபர் மசூதியை. கட்டுவோம் ராமர் ஆலயத்தை. புறப்படுவோம் யாத்திரை'

இதுதான் அத்வானியின் அஜெண்டா. தம்முடைய ரத யாத்திரைக்கு அவர் வைத்த பெயர் 'ராம ரத யாத்திரை'. இலக்கு ஒன்றுதான். 'இந்துக்களை ஒருங்கிணைப்போம். ராஜ்ஜியத்தை அமைப்போம்.' திட்டம், யுக்தி எல்லாம் சரியாக இருந்தது. 'நாடு முழுக்க மதவெறியைத் தூண்டி, இந்தியாவைத் துண்டாட விரும்புகிறாரா அத்வானி?' என்று காங்கிரஸ் உள்ளிட்ட எதிர்க்கட்சிகள் உறுமின. ஆனால், எதற்கும் அலட்டிக்கொள்ளவில்லை. அவர் பாட்டுக்கு ரத யாத்திரை போனார். ஆவேசம் ததும்பப் பேசினார். ஒவ்வொரு வார்த்தையும் தீப்பிழம்பாகக் கொதித்தது. இந்து இளைஞர்களின் நாடி நரம்புகள் புடைத்தன. ராமரின் பெருமைகளை, ராமர் பிறந்த இடத்தை, மசூதியின் சங்கதிகளை அழுத்தந்திருத்தமாகப் பேசினார். எதிர்பார்த்தது நடந்தது.

**டி**சம்பர் 6, 1992. அயோத்தியில் இருந்த பாபர் மசூதி இடித்துத் தரைமட்டமாக்கப்பட்டது. உபயம் : கரசேவகர்கள். சாதாரணத் தலைவராக இருந்த அத்வானி,

# அத்வானி 1

சர்ச்சைக்குரிய தலைவராக உருமாறத் தொடங்கியது அந்தப் புள்ளியில் இருந்து தான்.

கலவரத்தைத் தூண்டும் வகையிலும், மசூதி இடிப்பை வலியுறுத்தும் வகையிலும் அத்வானி பேசியதுதான் அத்தனைக்கும் காரணம் என்று குற்றம்சாட்டின எதிர்க்கட்சிகள். 'மசூதி இடிக்கப்பட்ட தினத்தன்று அவர் அயோத்தியில்தான் இருந்தார். இடிக்கப் பட்ட பிறகே அயோத்தியில் இருந்து வெளி யேறினார். ஆகவே, அவர்தான் அத்தனைக் கும் காரணம்' என்றன. அதை வலியுறுத் தியே அத்வானி மீது முதல் தகவல் அறிக்கை பதிவு செய்யப்பட்டது. இது குறித்து விசா ரணை செய்வதற்காக லிபரான் கமிஷன் அமைக்கப்பட்டது. விசாரணை நடந்து கொண்டிருந்தது.

அவருடைய முதல் இலக்கு. முதல் திட்டம். வெற்றி. அபார வெற்றி என்று உலகம் கூற, அவர் சொல்லிக் கொண்டதோ வேறு கருத்து :

'டிசம்பர் ஆறுதான் என் வாழ்க்கையின் துக்ககரமான நாள்.'

அடுத்த இலக்கு ஆட்சி. திட்டத்தைச் செயல்படுத்தத் தயாரானார். அதே ஃபார்முலா. மீண்டும் ரத யாத்திரை. 1997ல் தொடங்கிய அந்த யாத் திரைக்கு 'ஸ்வர்ண ஜெயந்தி யாத்திரை' என்று பெயர். வெறுமனே சுதந்திரம் பெற்றதால் மட்டும் இந்தியா சுபிட்சம் அடை யாது. அதற்குத் தேவை திறமையான நிர்வாகம். அதை பாரதிய ஜனதாவால் மட்டுமே தர முடியும் என்பதை வெளிப்படுத்தும் விதமாக யாத்திரை தொடங்கினார்.

'யாத்திரையின் பாதையில் பதற்றம் நிறைந்த பகுதிகளே அதிகம் இருக்கின்றன' என்று காங்கிரஸ் உள்ளிட்ட எதிர்க்கட்சிகள் அபாயக் குரல் எழுப்பின. அதுவும்கூட உண்மைதான். ஆனாலும் முன்பு போலவே அலட்சியம் காட்டினார் அத்வானி. யாத் திரை வெற்றிகரமாக நடைபெற்றது. அந்த யாத்திரைதான் பா.ஜ.க.வை ஆட்சிக் கட்டிலில் அமர வைத்தது. வாஜ்பாய் பிரதமரானார். அத்வானி உள்துறை அமைச்சரானார்.

சரி, பாகிஸ்தானின் தேசப்பிதாவாக மதிக்கப்படும் முகமது அலி ஜின்னாவைக் கொலை செய்ய சதி செய்தார் அத்வானி என்று ஒரு குற்றச்சாட்டு, பாகிஸ்தான் காவல் நிலையத்தில் இருப்பது எத்தனை பேருக்குத் தெரியும்?

(தொடர்வோம்)



# “இது இளைஞர்களுக்கான யாகம்!”

ஐம்பதாவது எபிசோடை நெருங்கியிருக்கிறது மக்கள் தொலைக்காட்சியின் 'சந்தனக்காடு' நெடுந்தொடர். இயக்குநர் வ.கௌதமனிடம் பேசினோம்.

''தமிழக மக்களிடையே இந்தத் தொடர் பரவலான பாராட்டுகளைப் பெற்றிருப்பது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியளிக்கிறது. ஒரு திரைப்படத்துக்கு இணையாக ஒவ்வொரு காட்சியையும் செதுக்கி வருகிறோம். எல்லாவற்றுக்கும் தகுந்த பலன் கிடைத்து வருவது ஊக்கமாகவும் அதே நேரத்தில் உற்சாகமாகவும் இருக்கிறது'' என்றவரிடம், 'ஆட்டோ சங்கர், சந்தன வீரப்பன் என்று சர்ச்சைக்குரிய விஷயங்களையே தொடர்ந்து கையாள்வதன் நோக்கம் என்ன?' என்றோம்.

''தனிப்பட்டு இந்த மனிதர்களின் மீது எனக்கு எந்தவித ஈர்ப்போ, வெறுப்போ கிடையாது. ஆனால், தமிழக இளைஞர்களை நல்வழிப்படுத்த வேண்டுமென்ற வேட்கை உள்ளவன் நான். ஆட்டோ சங்கரோ, வீரப்பனோ சும்மா எடுத்த உடனே அரிவாள், துப்பாக்கியைத் தூக்கிவிடவில்லை. அவர்களும் சாதாரண மனிதர்களாக வாழ்ந்தவர்கள்தான். அதிகாரம் மிக்க மனிதர்களும், காவல் துறையினரும்தான் அவர்களை மெல்ல மெல்ல தங்கள் வலைக்குள் விழவைத்து, தங்களின் வேலைக்காரனாக்கிக் கொண்டனர். இன்றைய இளைஞர்களுக்கும் இவர்களால் ஆபத்துகள் காத்திருக்கின்றன. அவர்களை எச்சரிக்கையாய் வழிநடத்தும் பொறுப்பு எல்லோரையும்போல எனக்கும் இருப்பதாலேயே இது போன்ற விழிப்புணர்வூட்டும் தொடர்களை நான் எடுத்து வருகிறேன். இது தங்களுக்கான யாகம் என்பதை இளைஞர்கள் உணர வேண்டும் என்பதே என் விருப்பம்'' என்று நீண்ட விளக்கமளித்தார்.



* வீரப்பனாக நடிக்கும் ராசாவுடன் கௌதமன்...

'வீரப்பனால் கொலையுண்ட காவல் துறையினர் பல பேர் இருக்க, தொடரில் வீரப்பனை நியாயப்படுத்தியும் காவலர்களைக் கெட்டவர்களாகச் சித்திரிக்கும் ஒரு பக்கப் போக்கு ஏன்' என்றால், அதற்கும் பதில் வைத்திருக்கிறார் கௌதமன்.

''பதிவுகள் என்றுமே நேர்மையாக இருக்கவே விரும்புகிறவன் நான். பாதிக்கப்பட்டவர் யாராக இருப்பினும், அதை அப்படியே காட்டுவதில் நான் சமரசம் செய்துகொள்ள மாட்டேன். வீரப்பனால் பாதிக்கப்பட்ட காவலர் குறித்தும் காட்டுவேன். மற்றபடி காவல் துறையினரை கெட்டவர்களாகச் சித்திரிக்கும் நோக்கம் எனக்கில்லை. நியாயம் மட்டுமே என் சந்தையில் விலை போகும்.''

– சுந்தரி



மங்கையர் மலரின்

# திருமண மலர்

## திருமண மலர் விளம்பரக் கட்டண விவரங்கள்

முதல் முப்பது வார்த்தைகளுக்கு ரூ. 500/-

30க்கு மேற்பட்ட வார்த்தைகள் ஒவ்வொன்றுக்கும் தலா ரூ. 15/-

வண்ணத்தில் ஹைலைட் செய்ய கூடுதல் கட்டணம் ரூ. 100/-

**1" X 1" அளவில் வண்ணப் புகைப்படத்துடன் 30 வார்த்தைகள் அடங்கிய விளம்பரத்துக்கு ரூ. 800/- (அதிகப்படியான வார்த்தை ஒவ்வொன்றுக்கும் ரூ 15/-)**



வண்ணப் புகைப்படத்துடன் விவரங்கள் அடங்கிய அரை பக்க **Profile** விளம்பரம் ரூ. 2500/-

வண்ணப் புகைப்படம் அனுப்புபவர்கள், தெளிவான புகைப்படமாக, பாஸ்போர்ட் அளவில் இரண்டு பிரதிகள் அனுப்பவும். புகைப்படங்களை திருப்பி அனுப்ப இயலாது.

கட்டணத்தை நேரில் ரொக்கமாகவோ அல்லது சென்னை செக்காகவோ, வெளியூர் டிமாண்ட் டிராப்டாகவோ, மங்கையர் மலர் என்ற பெயரில் எடுத்து அனுப்பவும்.

விவரங்களுக்கு தொடர்பு கொள்க:

## மங்கையர் மலரின் திருமண மலர்

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.

# புண்ணிய காரியங்களை ஸங்கிராந்தியில் ஏன் அனுஷ்டிக்க வேண்டும்?



மேஷம் முதலிய பன்னிரெண்டு ராசிகளில் கிரகமாக மாதந்தோறும் சஞ்சரிக்கும் சூரிய பகவான்.

ஒரு ராசியிலிருந்து வேறு ராசிக்கு பிரவேசிக்கின்ற சமயம் ஸங்கரமணம் ஸங்கிராந்தி என்று சொல்லப்படுகிறது. அந்தப் புண்ணிய காலங்களில் செய்கின்ற ஸ்நானம், தானம், ஹவ்யம், கவ்யம் முதலிய புண்ணிய காரியங்களுக்கு ஏழு வருஷம் சூரியன் நல்ல பலன்களைக் கொடுக்கிறார். ஆகையால் புண்ணிய காரியங்களை அவசியம் அனுஷ்டிக்க வேண்டும்.

தேவலர் : ஸங்கராந்தி சமயம் சூட்க்ஷமமானது. நம்மால் அறிய முடியாதது. ஆகையால் ஸங்கரமணத்திற்கு முன்பு முப்பது, பின்பு முப்பது நாழிகைகள் புண்ணிய காலமாகும்.

| ராசி | ஸங்கிரமணத்தின் நாமதேயம் | (ப்ருஹஸ்பதி வாக்குப்பலன்) புண்ணிய காலம் | புண்ணிய பலன் |
|---|---|---|---|
| மகரம் | உத்திராயணம் | பின் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| கும்பம் | விஷ்னுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மீனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மேஷம் | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| ரிஷபம் | விஷ்னுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மிதுனம் | ஷட்சீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கர்கடகம் | தக்ஷிணாயணம் | முன் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| சிம்மம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கன்னி | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| துலா | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| விருச்சிகம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| தனுசு | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |

திருமண வைபவங்களுக்கு சீர்முருக்கு, சீர் அதிரசம், சீர் முள்ளுத்தேன்குழல், அப்பம், திரட்டுப்பால், பருப்புத் தேங்காய்

ஸ்ரீ கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

எண்.24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு, சென்னை - 20. போன் : 2491 5662, 24914213

1/1, AE பிளாக், 11வது பிரதான சாலை, 8வது தெரு, அண்ணா நகர்,